அனைத்து உலகக்
குழந்தைகள் ஆண்டு



ஆறாவது (390-252)

# குழந்தை இலக்கிய மாநாடு

1979

சிறப்பிதழ்





குழந்தை எழுத்தாளர் சங்கம்

விலை ரூ. 1



# உலகக் குழந்தைகள் ஆண்டில்

# வானதியின் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| நல்வழி | ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள் | 3-00 |
| ரோஜாப் பெண் | பி. ஜ. ர. | 3-50 |
| கடல் கிழவன் | வாண்டு மாமா | 7-50 |
| மந்திரக் கம்பளம் | ,, | 9-00 |
| அதிசய வீணை | ,, | 3-50 |
| வீரகேசரியின் யாத்திரை | ,, | 3-00 |
| சர்க்கஸ் சுந்தரி | ,, | 3-50 |
| பச்சைப் புகை | ,, | 4-50 |
| மீன் அழகி | ,, | 3-50 |
| அரசகுமாரி ஆயிஷா | ,, | — |
| மந்திரச் சலங்கை | ,, | — |
| தெரிந்து கொள்ளுங்கள் | ,, | 4-50 |
| சூரியக் குடும்பம் | ,, | 3-00 |
| இயேசுபிரானின் உபதேசக் கதைகள் | சரஸ்வதி சுவாமிகள் | 4-00 |
| பெரிய புராணக் கதைகள் (நான்கு பாகங்கள்) | தே. ப. பெருமாள் | 12-00 |
| கடவுளைக் கண்ட குழந்தைகள் | என். கோபால் | 1-50 |
| தெனாலிராமன் கதைகள் | சம்பந்தம் | 5-00 |
| திருமால் பெருமைக் கதைகள்... | வலம்புரி அன்னுமலை | 2-00 |
| பாவேந்தர் நெஞ்சில் குழந்தைகள் | கவிஞர் புத்தனேரி ரா. சுப்பிரமணியம் | அச்சில் |
| சபாஷ் மணி | பூவண்ணன் | ,, |
| ராஜா வாழ்க ! | தங்கமணி | ,, |

விவரங்களுக்கு :


வானதி பதிப்பகம்

13, தீனதயாளு தெரு.
பாண்டிபஜார் பக்கம்
தி. நகர் தலைமை தபால் நிலையம்
[எதிரில்

சென்னை - 600 017,

டெலிபோன் : 442810




அனைத்து உலகக் குழந்தைகள் ஆண்டு

# ஆறுவது குழந்தை இலக்கிய மாநாடு

## சிறப்பிதழ்

1979 நவம்பர் 12, 13, 14

ஏ. வி. எம். ராஜேஸ்வரி திருமண மண்டபம்
மயிலாப்பூர், சென்னை-4



குழந்தை எழுத்தாளர் சங்கம்
[பதிவு S. 320]
32, வைத்தியராமையர் தெரு, சென்னை-17

# குழந்தை எழுத்தாளர் சங்கம்

32, வைத்தியராமய்யர் தெரு, சென்னை - 600 017

தோற்றம் : 1950 பதிவு எண் : 320

## குழந்தை இலக்கிய மாநாடு

1979 நவம்பர் 12, 13, 14

வரவேற்புக் குழுத் தலைவர்
M. A. M. ராமசாமி

சங்கத் தலைவர்
அழ. வள்ளியப்பா

துணைத் தலைவர்கள்
பூவண்ணன், புத்தனேரி ரா. சுப்பிரமணியம்

கௌரவச் செயலாளர்
ஈ. எஸ். ஹரிஹரன் (ரேவதி)

பொருளாளர்
ரத்னம்

செயற்குழு

கு. ராஜாராம்
புவிவேந்தன்
மகிழ்ச்சிக் கண்ணன்
பூவை அமுதன்
திலகவதி ஜெகதீசன்
ரா. பா. சாரதி (கோவூர்)
ஜெ. எத்திராஜன்
அன்புப்பழம் நீ
எஸ். வஜ்ரவேலு
கே. ஜெயலட்சுமி
இனியவன் (வேடந்தாங்கல்)

கௌரவ தணிக்கையாளர்
ஈ. எஸ். ரங்கநாதன்

---

அச்சிட்டோர் : எஸ். தன்யகுமார் பிரஸ்
3, போக் ரோடு தியாகராய நகர் சென்னை - 600 017
தொலைபேசி 441189

## வரவேற்பு உரை

தொழில் மேதை

உயர்திரு எம். ஏ. எம். ராமசாமி அவர்கள்

மாண்புமிகு நிதி அமைச்சர்
திரு நாஞ்சில் கி. மனோகரன் அவர்களே,
உயர்நீதி மன்ற நீதிபதி மதிப்பிற்குரிய
ஜஸ்டிஸ் எஸ். மோகன் அவர்களே,
உயர்திரு. ஆர். இராமகிருஷ்ணன் அவர்களே,
சங்கத் தலைவர் அவர்களே, உறுப்பினர்களே,
தாய்மார்களே, பெரியோர்களே,
வணக்கம்.

உங்கள் அனைவரையும் குழந்தை எழுத்தாளர் சங்கத்தின் சார்பில் வரவேற்பதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

குழந்தைக் கவிஞர் திரு. வள்ளியப்பா அவர்களும் கவிஞர் புத்தனேரி சுப்பிரமணியம் அவர்களும் இந்த மாநாட்டின் வரவேற்புக் குழுத் தலைவராக இருக்கும்படி என்னைக் கேட்டுக் கொண்ட பொழுது நான் கொஞ்சமும் தயங்காமல் ஏற்றுக் கொண்டேன்.

நான் ஒரு குழந்தை எழுத்தாளர் அல்ல; ஆனாலும் குழந்தைகளின் வளர்ச்சியில் அக்கறை உள்ளவன். நம் நாட்டுக் குழந்தைகள் கல்வி அறிவிலும் விளையாட்டு களிலும் நன்கு தேர்ச்சி பெறவேண்டும் என்ற ஆவல் எனக்கு உண்டு. எனவேதான் இந்தப் பொறுப்பை ஏற்றுக் கொண்டேன்.

சிறுவர் சிறுமியரின் அறிவு வளர்ச்சிக்கு ஏற்ற நல்ல நல்ல புத்தகங்கள் தமிழில் இன்னும் ஏராளமாக வர வேண்டும் என்று கருதுகிறேன்.

பத்திரிகைகளிலும் சில மலிவுப் புத்தகங்களிலும் தரக்குறைவான கதைகள் வருகின்றன என்று பலர் வருத்தப்படுகிறார்கள். இது ஓரளவு உண்மைதான். ஆனாலும் குழந்தைகளுக்காக வெளிவரும் நூல்கள் மட்டும் தரமாக—நல்ல முறையில்—வெளிவருகின்றன என்று உறுதியாக நம்புகிறேன். எனவே, குழந்தைக்காக எழுதும் நல்ல எழுத்தாளர்களை நான் பாராட்டுகிறேன்.

தரமான நூல்கள் வெளிவருவதற்குக் குழந்தை எழுத்தாளர் சங்கம் ஒரு முக்கிய காரணம் என்று நான் மனமாரப் பாராட்டுகிறேன்.

நேரு பிறந்த நாளை ஒட்டி இந்தச் சங்கம் பல புதிய நூல்களை வெளியிட ஏற்பாடு செய்து வருவது மிகச் சிறந்த முயற்சி. சங்கத்தின் தூண்டுதலால், சங்கம் நடத்திய விழாக்களின் மூலம் 400-க்கு மேற்பட்ட புதிய குழந்தைப் புத்தகங்கள் வெளியிடப்பட்டுள்ளன என்று அறிந்து மிகவும் மகிழ்கிறேன். நாளைய விழாவில் இன்னும் பல புதிய நூல்கள் வெளியிடப்படுகின்றன. சங்கத்தின் பல சாதனைகளில் இதுவும் ஒன்று.

ஆண்டுதோறும் சிறந்த எழுத்தாளருக்கும் பதிப்பாளருக்கும் கேடயம் வழங்கிப் பாராட்டி வருவது சங்கத்தின் மற்றொரு நல்ல திட்டம். இந்தத் திட்டத்தின்படி இந்த மாநாட்டில் திருவாளர்கள் பூவண்ணன், தங்கமணி ஆகிய எழுத்தாளர்களும், அருணோதயம் பதிப்பக உரிமையாளர் திரு. அருணனும் பாராட்டுக் கேடயம் பெறுகிறார்கள்.

ஆண்டுதோறும் இரண்டு துறைகளில் சிறந்த கையெழுத்துப் பிரதிகளுக்கு, கலைமேதை ஏ.வி.எம். அவர்களின் அறக்கட்டளைப் பரிசுகளாகத் தங்கப் பதக்கங்களும் வெள்ளிப் பதக்கங்களும் வழங்கும் ஏற்பாட்டையும் சங்கம் கடந்த ஏழு ஆண்டுகளாகச் சிறப்பாக நிறைவேற்றி வருகின்றது. இந்தப் பரிசளிப்பு நிகழ்ச்சி நாளை நடைபெறவிருக்கிறது.

நாளை மறுநாள் குழந்தைப் பாடல் அரங்கம் ஒன்று நடைபெறப் போகிறது. ஆகவே, இந்த மாநாட்டில்

மூன்று நாட்களும் பயனுள்ள பல சுவையான நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன.

வெள்ளி விழாவைத் தாண்டித் துள்ளு நடைபோடும் குழந்தை எழுத்தாளர் சங்கத்துக்கு, அரசாங்கமும் பொதுமக்களும் இன்னும் பலவகைகளில் ஆதரவு தர வேண்டும் என்பது என் விருப்பம்.

குழந்தைப் புத்தக டிரஸ்ட் (Children's Book Trust) ஒன்று ஏற்படுத்துவதற்கு அரசாங்கம் முன்வர வேண்டும் என்பது சங்கத்தின் நீண்டகாலக் கோரிக்கை. இந்தக் கோரிக்கை மிகவும் நியாயமானது. குழந்தைப் புத்தக டிரஸ்ட் பலவகைகளில் குழந்தை இலக்கியத்தை வளர்க்க முடியும்.

இந்த மாநாட்டைத் தொடங்கி வைக்க வந்துள்ள மாண்புமிகு நிதி அமைச்சர் அவர்களும், நாளை புத்தக வெளியீட்டு நிகழ்ச்சியை நடத்தவிருக்கும் மாண்புமிகு கல்வி அமைச்சர் அவர்களும் மனம் வைத்தால் குழந்தைப் புத்தக டிரஸ்ட் இந்த அனைத்து உலகக் குழந்தைகள் ஆண்டிலேயே அமைக்கப்பட்டுவிடும் என்பது உறுதி. மாண்புமிகு முதலமைச்சர் அவர்களும் இந்தத் திட்டத்தை மனப்பூர்வமாக ஏற்றுக் கொள்வார்கள் என்று நம்புகிறேன்.

பொது நூல்நிலையங்களிலும், கல்வித் துறையின் கீழ் உள்ள எல்லா நூல்நிலையங்களிலும் கட்டாயமாகக் குழந்தைப் புத்தகங்களை வாங்கி வைக்க வேண்டும் என்று அரசாங்கம் ஆணை பிறப்பித்தால், நல்ல நூல்கள் பலவற்றை வெளியிடும் துணிவைப் பதிப்பாளர்கள் பெறுவார்கள், எழுத்தாளர்களும் ஊக்கம் பெறுவார்கள்.

மாண்புமிகு நிதி அமைச்சர் திரு. மனோகரன் அவர்கள் நல்ல சிந்தனையாளர்; அறிவு வளர்ச்சிப் பணியில் ஆர்வம் மிகுந்தவர். அத்தகைய பண்பாளர் இந்த மாநாட்டைத் தொடங்கி வைப்பது மிகவும் பொருத்தம்.

மாநாட்டுத் தலைவர் திரு. அழ. வள்ளியப்பா அவர்களைப் பற்றி நான் உங்களுக்கு அறிமுகம் செய்து வைப்பது பூக்கடைக்கு விளம்பரம் செய்வது போல

இருக்கும். அவர் நல்ல கவிஞர்; சங்கப் பணியே தம் வாழ்க்கையின் லட்சியமாகக் கொண்டவர். இந்தச் சங்கத்தை ஆரம்பக் காலம் முதல் கண்ணும் கருத்து மாகப் பேணி வருபவர். எனவே அவருடைய தலைமை யில் நல்ல பல திட்டங்கள் உருவாகும் என எதிர் பார்க்கலாம்.

சங்கத்தின் சார்பில் பாராட்டுக் கேடயங்கள் வழங்க வந்துள்ள, மதிப்பிற்குரிய உயர்நீதிமன்ற நீதிபதி ஜஸ்டிஸ் எஸ். மோகன் அவர்கள் நீதித் துறையின் சிறந்த அறிஞர்களில் ஒருவர். நல்ல பேச்சாளர்; முற் போக்கு எண்ணம் கொண்டவர். அவருடைய திருக்கரத் தால் கேடயம் பெறுவோர் பாக்கியசாலிகளே.

கலைமேதை ஏவி. மெய்யப்பச் செட்டியார் அவர் கள் மிகச் சிறந்த இலக்கிய ரசிகராக விளங்கினர். அன்பர்கள் இந்தத் திருமண மண்டபத்தைத் தங்கள் சொந்த வீடுபோல் கருதிப் பயன்படுத்திக் கொள்ள இலவசமாகக் கொடுத்து உதவியவர். இந்தச் சங்கத்தின் சிறந்த புரவலராக விளங்கினர். எனவே மறைந்த மாமேதையான அவரது உருவப் படத்தை இன்று திறந்து வைப்பதன் மூலம் சங்கம் தனது நன்றியைச் செலுத்துகின்றது. இந்தப் படத்தைத் திறந்து வைக்க இசைந்துள்ளவர் என் இனிய நண்பர் திரு. ஆர். ராம கிருஷ்ணன் அவர்கள் எக்ஸ்பிரஸ் குருப் பத்திரிகையின் தரம் உயர்ந்த பதிப்பாசிரியர். அவருடைய கருத்துரை எழுத்தாளர்களுக்கு மிகவும் பயன்படும்.

நாளைய நிகழ்ச்சியில் மாண்புமிகு கல்வி அமைச்சர் திரு. அரங்கநாயகம் அவர்களும் கைத்தறி அமைச்சர் திருமதி சுப்புலட்சுமி ஜெகதீசன் அவர்களும் கலந்து கொள்கிறார்கள்.

நவம்பர் 14, நேரு பிறந்தநாளின் போது, குழந் தைப்பாடல் அரங்கத்தை அரசவைக் கவிஞர் நண்பர் திரு. கண்ணதாசன் அவர்கள் தொடங்கி வைப்பதும், திரு. மி. ப. சோமசுந்தரம் தலைமை ஏற்பதும், திரு. அகிலன் போன்ற புகழ்பெற்ற எழுத்தாளர்கள் பங்கு கொள்வதும் மிகச் சிறப்பான நிகழ்ச்சிகளாகும்.

எல்லா நிகழ்ச்சிகளுக்கும் நீங்கள் எல்லோரும் தவறு மல் நண்பர்களுடன் வந்திருந்து சிறப்பிக்க வேண்டு மெனக் கேட்டுக் கொள்கிறேன்.

குழந்தை இலக்கிய வளர்ச்சிக்கு என்னால் ஆன உதவியைச் செய்ய எப்போதும் ஆயத்தமாக இருக் கிறேன்.

மீண்டும் எல்லோருக்கும் அன்புடன் நல்வரவு கூறி அமைகிறேன். வணக்கம்.



★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★



# சாகித்திய அக்காதெமி

## புதிய தமிழ் வெளியீடுகள்

| நாவல்கள் | ரூ பை |
|---|---|
| 1. விநோதினி (வங்க நாவல்) (இரண்டாம் பதிப்பு) | 10-50 |
| 2. பொம்மலாட்டம் (வங்க நாவல்) | 14-00 |
| 3. பண்டித பரமேஸ்வர சாஸ்திரி உயில் (தெலுங்கு நாவல்) | 10-50 |
| 4. பேராசிரியர் (மலையாள நாவல்) (இரண்டாம் பதிப்பு) | 5-00 |
| 5. பொலிவு இழந்த போர்வை (உருது நாவல்) (இரண்டாம் பதிப்பு) | 5-00 |
| **சிறு கதைகள்** | |
| 1. பீகார் மாநில நாட்டுக் கதைகள் | 8-00 |
| 2. மராத்திச் சிறுகதைகள் | 18-00 |
| 3. மலையாளச் சிறுகதைகள் | 10-00 |
| **கவிதைகள்** | |
| 1. தமிழ்க் கவிதைக் களஞ்சியம் (மூன்றும் பதிப்பு) | 15-00 |
| 2. பாரதியார் இன்கவித் திரட்டு (இரண்டாம் பதிப்பு) | 5-00 |

இந்திய இலக்கியச் சிற்பிகள் வரிசை ஒவ்வொன்றும் 2-50

1. பி எம். ஸ்ரீகண்டய்யா, 2. சந்து மேனன், 3. வள்ளத்தோள், 4. வேமனர், 5. மீராபாய், 6. வீரேசலிங்கம், 7. பசவேஸ்வரர், 8. பாணபட்டர், 9. காஸீ நஸ்ருல் இஸ்லாம்

| இலக்கிய வரலாறு | |
|---|---|
| 1. கன்னட இலக்கிய வரலாறு | 20-00 |
| 2. அஸ்ஸாமிய இலக்கிய வரலாறு | 12-00 |

சாகித்திய அக்காதெமி
புதுதில்லி — கல்கத்தா — சென்னை — பம்பாய்
தென்மண்டல அலுவலகம்,
29, எல்டாம்ஸ் சாலை சென்னை - 600 018

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★



வரவேற்புக் குழுத் தலைவர்

தொழில்மேதை

திரு. எம். ஏ. எம் ராமசாமி அவர்கள்



சங்கத் தலைவர்
குழந்தைக் கவிஞர்
**திரு. அழ. வள்ளியப்பா அவர்கள்**

மாநாட்டுத் தலைவர்

குழந்தைக் கவிஞர்

## திரு. அழ. வள்ளியப்பா அவர்கள்

உலகக் குழந்தைகள் ஆண்டிலே நடைபெறும் இக் குழந்தை இலக்கியச் சிறப்பு மாநாட்டுக்கு வருகை தந்துள்ள அனைவருக்கும் என் பணிவான வணக்கம்.

குழந்தை எழுத்தாளர் சங்கத் தலைவன் என்ற முறையிலே, இச் சிறப்பு மாநாட்டுக்குத் தலைமை தாங்கும் நற்பேற்றினை எனக் களித்த நண்பர்கள் அனைவருக்கும் என் இதயங்கனிந்த நன்றி.

இக் குழந்தைகள் ஆண்டிலே குழந்தைகளின் உடல் வளரவும், உள்ளம் வளரவும் அவற்றின் மூலமாக அவர்களின் மகிழ்ச்சி பெருகவும் பல நாடுகளும் பலவகைகளில் பல நற்பணிகளை ஆற்றிவருகின்றன. நம் நாட்டிலும் சில பணிகள் மேற்கொள்ளப் பட்டுள்ளன. இந்தப் புனிதப் பணியில் குழந்தை இலக்கியம் படைக்கின்ற நாமும் கணிசமான ஒரு பங்கினை ஏற்றுச் செயலாற்ற வேண்டும் என்பதே நம் ஆசை.

கடந்த 29 ஆண்டுகளாக ஆரவாரமின்றி, அமைதியாக ஆக்கப்பணியாற்றி வருகின்றது இச்சங்கம் என்பதை இலக்கிய உலகமும், எழுத்துலகமும் நன்கறியும்.

குழந்தைகளுக்காக எழுதுவோர் ஒன்றுகூடி 1950-இல் இச் சங்கம் நிறுவியதை, 'உலகிலேயே ஒரு புதுமை' எனப் புகழ்ந்து கூறினர் உலகப் புகழ் பெற்ற அமெரிக்க எழுத்தாளராகிய மன்ரோ லீஃப். முதல்முதலாக இத்தகைய ஒரு சங்கம் நிறுவப் பெற்றதால் மட்டும் இதற்குப் பெருமை வந்து விடவில்லை.

தமிழகத்தில் முதல்முதலாக—அதாவது 1950-ஆம் ஆண்டில் குழந்தைப் புத்தகக் காட்சியை நடத்தி, இன்று பல

இடங்களிலும் குழந்தைப் புத்தகக் காட்சிகள் நடைபெற வழி காட்டியது இச்சங்கம். முதல்முதலாகக் குழந்தைகள் நாடக விழாவை 1955-இல் நடத்தி குழந்தைகளுக்கான நாடகங்களின் அவசியத்தை நன்குணர்த்தியது இச்சங்கம். முதல்முதலாக நேருஜியின் பிறந்தநாளை, குழந்தை இலக்கிய விழாவாகக் கொண்டாடி, 1957-ஆம் ஆண்டு முதல் தொடர்ந்து கொண்டாடி வரும் இவ் விழாவில் பல பதிப்பாளர்களின் ஒத்துழைப்புடன் 400க்கு மேற்பட்ட குழந்தை நூல்களை வெளியிட்டுள்ளது இச் சங்கம். 1957-ஆம் ஆண்டு உலகப் புகழ் பெற்ற நூலகவியல் நிபுணர் டாக்டர் எஸ். ஆர். ரங்கநாதனவர்களின் தலைமையில் ஒரு குழுவை அமைத்து, அன்றுவரை வெளிவந்திருந்த 263 புத்த கங்களையும் ஆராய்ந்து அறிக்கை வெளியிட்டது இச்சங்கம். புத்தகங்களைப் பற்றித் தமிழிலே முதல்முதலாக எடுக்கப் பெற்ற 'சர்வே' அதுதான்.

தமிழ் எழுத்தாளர்களைப் பற்றிய முதல் விவரத் தொகுப்பு நூல் எனக் கூறப்படும் 'குழந்தை எழுத்தாளர் - யார், எவர்?' என்ற நூலை 1961இல் வெளியிட்டது இச்சங்கம். அது மட்டு மன்று; குழந்தைகளுக்காக எழுதும் 300 க்கும் மேற்பட்ட எழுத்தாளர்களின் புகைப்படங்களையும் திரட்டி, அவர்களைப் பற்றிய விவரங்களுடன் தொகுத்து வைத்துள்ளது இச்சங்கம்.

இந்திய மொழிகளில் எந்த ஒரு மொழியிலும் இதுவரை மேற் கொள்ளப்படாத ஒரு புது முயற்சியாக 'குழந்தை இலக்கியம் — ஒரு மதிப்பீடு' என்ற நூலை ஆற்றலும் அனுபவமும் மிக்க எழுத்தாளர்களைக் கொண்டு எழுதச் செய்து 1976 ஆம் ஆண்டு நடந்த தனது வெள்ளி விழாவில் வெளியிட்டது இச்சங்கம். தமிழில் இதுவரை வெளிவந்துள்ள 1700 குழந்தைப் புத்தகங் களைப் பற்றிய விவரங்களையும் திரட்டித் தொகுத்துள்ளது இச் சங்கம். நூல்வடிவில் அதை விரைவில் வெளியிடும் முயற்சியிலும் ஈடுபட்டுள்ளது.

சங்கத்தின் சாதனைகளைக் கூறும் இந்நேரத்தில் சங்கம் கண்ட கனவுகளைப் பற்றியும் கூறவேண்டும். சங்கம் கண்ட கனவுகளில் சில பலித்துள்ளன. மற்றக் கனவுகளும் விரைவில் பலிக்குமென்ற நம்பிக்கை நமக்கு இருக்கிறது.

1950-ஆம் ஆண்டில் 'புத்தகங்கள்' என்று கௌரவமாகச் சொல்லத் தக்க வகையில் வெளிவந்திருந்த குழந்தைப் புத்தகங் களின் எண்ணிக்கை நாற்பதுக்கும் குறைவாகவே இருந்தன.

குழந்தைகளுக்கு ஏராளமான புத்தகங்கள் — எல்லாத் துறை களிலும் எழுதப் பெற்ற புத்தகங்கள் – சிறந்த அச்சு அமைப்புடன் கூடிய புத்தகங்கள் வெளிவர வேண்டுமென அன்று கனவுகண்டது இச்சங்கம். அக்கனவு பலிக்கும் வகையில் இன்று குழந்தைகளுக் காக 1700 க்கு மேற்பட்ட புத்தகங்கள் வெளிவந்துள்ளன.

தமிழிலே குழந்தைகளுக்கான கலைக் களஞ்சியம் வெளிவர வேண்டுமெனக் கனவு கண்டது இச்சங்கம். ஆங்கில மொழிக் கலைக்களஞ்சியங்களுடன் ஒப்பிடும் அளவுக்கு மிகச் சிறந்த முலறயில் பத்துத் தொகுதிகள் கொண்ட 'குழந்தைகள் கலைக் களஞ்சியம்' வெளிவந்திருப்பதன் மூலம் அக்கனவும் பலித்துள்ளது.

நாடெங்கும் குழந்தைகளுக்கான நூலகங்கள் தோன்ற வேண்டும், குழந்தைகளுக்கான கலை அரங்குகள் அமைக்கப்பெற வேண்டும், குழந்தைகளுக்கான திரைப்படங்கள் எடுக்கப்பட வேண்டும், தமிழ்மொழிக்கெனத் தனியாக ஒரு குழந்தைப் புத்தக டிரஸ்ட் நிறுவப் பெற வேண்டும் என்பன போன்ற இச்சங்கத்தின் மற்றக் கனவுகளும் பலிக்காமல் போகா. காரணம், மனித சக்திக்கு அப்பாற்பட்ட அல்லது நடைமுறைக்கு ஒவ்வாத அல்லது தன்ன லம் பொதிந்த கனவு எதையும் இச்சங்கம் கண்டதில்லை; காண்பது மில்லை. அதனால், இக்கனவுகள் நிச்சயம் பலிக்கும் என்ற நம்பிக்கை எங்களுக்கு உண்டு. இக்கனவுகள் பலிக்கும் வகையில், மக்கள் நலனில் அக்கறை கொண்ட நம் தமிழக அரசு ஆவன செய்யுமெனத் திடமாக நம்புகிறோம்.

''குழந்தைகளின் அறிவுப் பசிக்குப் போதிய, தகுந்த உணவளிக்கப்பட வேண்டும். இல்லையெனில் குழந்தைகளின் மனம் சரியான வழியில் செல்லாமல், கோணல் வழியிலே செல்லும். அப்போது வருந்திக் கவலைப் படுவது, நோய் வந்த போது கவலைப்படுவது போன்றது.'' என்கிறார் டாக்டர் மு. வ. அவர்கள். குழந்தைகளின் அறிவுப் பசிக்குத் தகுந்த உணவைத் தக்க சமயத்தில் தேவையான அளவில் அளிக்க வேண்டும் என்ற ஆர்வத்துடன் பல குழந்தை எழுத்தாளர்கள் முன்வந்துள்ளனர். தங்கள் எழுத்தால் பிறரைப் பிரமிக்க வைக்க வேண்டுமென்றோ, தங்கள் புலமையைக் காட்டவேண்டுமென்றோ நினையாமல், எளிய சொற்களில், நேரடியாக, இயல்பாக, குழந்தைகள் புரிந்து மகிழ வேண்டுமே என்ற அக்கறையுடன் எழுதுகின்ற பல எழுத்தாளர் களை இன்று நாம் காண்கிறோம். அவர்களால் குழந்தை இலக்கியம் வளம் பெற்று வருவது மகிழ்ச்சிக்குரியது.

இந்தி, வங்காளி போன்ற ஒரு சில மொழிகளைத் தவிர மற்ற எந்த இந்திய மொழிக்கும் பின் தங்கியதன்று நமது தமிழ்க் குழந்தை இலக்கியம். இதை நான் கூறவில்லை. இந்தியாவின் பல பகுதிகளிலும் நடைபெற்ற குழந்தை இலக்கியக் கருத்தரங்கு களில் பிற மொழியாளர்கள் பலமுறை கூறியுள்ளதையே இங்கு எடுத்துக் காட்டினேன்.

இன்று குழந்தைகளுக்காகக் கவிதை எழுதுவோர் நூற்றுக்கு மேல் உள்ளனர். இவர்களில் எளிய நடையில், இனிய சந்தத்தில், புதிய புதிய பொருள்களைப் பற்றிக் கற்பனை நயத்துடன் புதுப்புது உத்திகளுடனும் எழுதுகின்ற பலரைக் காண்கிறோம்.

பெரியவர்களுக்காகக் கவிதை எழுதுவதைக் காட்டிலும், சிறுவருக்கு எழுதுவது — அதிலும் மிகச் சிறு குழந்தைகளுக்கு எழுதுவது மிகவும் கடினம். பொதுவாகக் கவிதையைப் பற்றி அலெக்ஸாண்டர் போப் கூறியுள்ள கருத்து இதுதான்: கவிதை என்பது எண்ணத்தில் உதயமாவது; ஆயினும் ஏற்ற வகையில் வெளிப்படுத்த இயலாதது. (POETRY IS WHAT WAS THOUGHT OF, BUT NEVER SO WELL EXPRESSED). இதையே வேறு வகையில் ரிக் வேதத்தில் கூறப்பட்டுள்ளதாக அறி கிறேன். ''மனிதன் நினைப்பதிலும் உணர்வதிலும் நான்கில் ஒரு பங்கையே வாக்கில் வெளிப்படுத்த முடிகிறது. மீதி மூன்று பங்கும் வாக்குத் தேவதையின் இருட்குகையிலே சிக்கி வெளிவர வகையின்றி அழிந்து விடுகிறது.''

அலெக்ஸாண்டர் போப்பும், ரிக்வேதமும் கூறிய கருத்துக்களை குழந்தைகளுக்காக எழுதுவோர் தங்கள் அனுபவத்தில் நன்கு உணர்ந்திருப்பர்.

குழந்தைகளுக்கேற்ற வகையில் இயற்கையைப் பற்றியும், உயிரினங்களைப் பற்றியும், நாட்டைப் பற்றியும், பெரியோர்களைப் பற்றியும் பல கவிஞர்கள் ஏராளமான பாடல்களை இயற்றித் தந் துள்ளனர். ஆயினும், கதைப் பாடல்கள், நகைச் சுவைப் பாடல்கள், விளையாடும்போது பாடுவதற்கேற்ற பாடல்கள், கவிதை நாடகங்கள் முதலியன இன்னும் நிறைய வெளிவர வேண்டும்.

சிறுவருக்கான 800க்கு மேற்பட்ட சிறுகதை நூல்களும் ஏறத் தாழ 100 நாவல்களும் இதுவரை வெளிவந்துள்ளன. மிகச் சிறந்த பல கதைகளை, பல நிலைக்களன்களை வைத்து அழகாக

எழுதியுள்ளனர் நம் எழுத்தாள நண்பர்கள். நம் தமிழ் நாட்டின் தனிச் சிறப்பை எடுத்துக் காட்டும் கதைகள், தேசபக்தியை ஊட்டுகின்ற கதைகள், சிறுவருக்கேற்ற தற்கால நிகழ்ச்சிகளை மையமாகக் கொண்ட கதைகள், விஞ்ஞான உண்மைகளை அடிப் படையாகக் கொண்ட கதைகள் இவைகளெல்லாம் மிகக் குறை வாகவே உள்ளன. இத்துறைகளில் நம் கதாசிரியர்கள் கவனம் செலுத்த வேண்டும்.

டாக்டர் எஸ் ஆர். ரங்கநாதன் அவர்கள் தலைமையில் தமிழில் வெளிவந்திருந்த குழந்தை நூல்களை ஆய்ந்து பார்த்து 1957 ஆம் ஆண்டில் அறிக்கை சமர்ப்பித்தது ஒரு குழு என முன்பு கூறினேனே, அக்குழு, அதுவரை வெளிவந்திருந்த 263 குழந்தை நூல்களில் அறிவியல் நூல்கள் முப்பதுக்கும் குறைவாகவே இருந்தன என்பதைச் சுட்டிக் காட்டி, ''இப்போது இருப்பது போலவே கதைப் புத்தகங்கள் அதிகமாகவும் அறிவியல் புத்த கங்கள் குறைவாகவும் தொடர்ந்து இருக்குமேயானால், குழந்தை களின் அறிவு வளர்ச்சிக்கும், அதைப் பொறுத்து நாட்டின் முன்னேற்றத்துக்கும் ஒரு தடை ஏற்படும். குழந்தைகள் தமது பொறுப்பை உணரவும் ஆக்கப்பணிகளில் ஊக்கத்தோடு ஈடு படவும் இயலாமல் போய் விடுவர்'' என எச்சரித்திருந்தது. அன்று முப்பதாக இருந்த அறிவியல் நூல்கள், இன்று முன்னூறாகப் பெருகியுள்ளன. விஞ்ஞானத்தின் பல்வேறு துறைகளைப் பற்றியும் வெளி வந்துள்ள அப்புத்தகங்களின் பட்டியலைப் பார்த்தவர்கள் ''தமிழிலே குழந்தைகளுக்கு இப்படிப்பட்ட நூல்களெல்லாம் கூட வந்திருக்கின்றவா!'' என்று வியப்போடு கேட்கின்றனர். விரைந்து வளர்ந்து வரும் விஞ்ஞான உலகில் நாம் பின்தங்கி விடக்கூடாது. ஆக்கப் பணிகளில் அறிவைச் செலுத்த உதவும் வகையில் தொடர்ந்து அறிவியல் நூல்களை எழுத்தாள நண்பர்கள் எழுதித் தர வேண்டுமெனக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

இந்திய மொழிகளின் வரலாறுகளைப் பார்த்தால் பெரும் பாலான இந்திய மொழிகளில் குழந்தைப் பத்திரிகைகளைத் துவக்கி நடத்தியவர்கள் கிறிஸ்தவர்களே என்ற உண்மை புல னாகும். தற்போது குழந்தைகளுக்காக இந்தியில் 44 பத்திரிகை களும், வங்காளியில் 2 பத்திரிகைகளும், மராத்தியில் 17 பத்தி ரிகைகளும் வெளிவருகின்றன. மூத்த மொழியெனப் போற்றப் படும் நம் தமிழ்மொழியில் ஐந்தாறு குழந்தைப் பத்திரிகைகள் கூட இல்லாதது பெருங்குறைதான்.

குழந்தைகளுக்காக நூல்களை எழுதி இன்று புகழுடன் விளங்கும் பல எழுத்தாளர்கள், துவக்க காலத்தில் பத்திரிகையில்

283

கும் அதிகமாகியுள்ளது. அச்சுக் கூலி, படங்கள் தயாரிக்கவும், பிளாக் செய்யவும் ஆகின்ற செலவு, புத்தகங்களை வெளியிடங்களுக்கு அனுப்புகின்ற செலவு யாவுமே நாளுக்கு நாள் ஏறிக் கொண்டிருக்கின்றன. மற்ற நாடுகளில் உற்பத்திச் செலவைப் போல் 4 அல்லது 5 மடங்கு புத்தகத்திற்கு விலை வைக்கிறார்கள். ஆனால், நம் நாட்டில் $2\frac{1}{2}$ அல்லது 3 மடங்குக்கு மேல் விலை வைப்பதில்லை. அப்படியிருந்தும், தமிழ்ப் புத்தகம் என்றால் விலை அதிகம் என்கின்றனர். தாள் விலை குறைய அரசு ஏதேனும் ஒரு வழி கண்டுபிடித்தாக வேண்டும். எனக்குத் தெரிந்த ஒரு வழியைக் கூறுகிறேன். பரிசீலனை செய்து பார்க்க வேண்டுகிறேன்.

ஐந்தாவது வகுப்புவரை மீண்டும் சிலேட்டிலே எழுதுவது என்ற முறையைக் கொண்டுவந்தால், அவர்களுக்காகத் தயாரிக்கப்படும் நோட்டுப் புத்தகங்களுக்கான தாள் மீதமாகும். இவ்வாறு மீதமாகும் ஆயிரக்கணக்கான டன் எடையுள்ள தாளை, புத்தக வெளியீட்டுக்குப் பயன்படுத்தலாம். ஆண்டுதோறும் ஒவ்வொரு குழந்தைக்கும் 30, 40 ரூபாய்க்கு நோட்டுப் புத்தகம் வாங்கவேண்டுமே எனக் கவலைப்படும் பெற்றோருக்கும், நோட்டுப் புத்தகங்களைத் தினமும் தூக்க முடியாமல் தூக்கிச் செல்லும் இளங் குழந்தைகளுக்கும் பளு குறையுமல்லவா ?

குழந்தைப் புத்தக டிரஸ்ட் ஒன்று தமிழகத்தில் ஏற்படுத்த வேண்டுமென்ற ஆவலை வெளியிட்டு 1956 ஆம் ஆண்டிலிருந்து அரசுக்குத் தொடர்ந்து வேண்டுகோள் விடுத்து வருகிறோம். இந்த ஆண்டின் துவக்கத்தில், குழந்தைப் புத்தக டிரஸ்ட் அமைப்பதற்கான திட்டம் ஒன்றைத் தயாரித்துத் தருமாறு அரசு எங்களிடம் கேட்டது. அவ்வாறே தயாரித்து அனுப்பினோம். உலகக் குழந்தைகள் ஆண்டான இந்த ஆண்டிலாவது, எங்கள் ஆசை நிறைவேறுமென நம்பி இருக்கிறோம்.

5 லட்சம்—அதிகமாகப் போனால் 10 லட்ச ரூபாய்-இதற்கென ஒதுக்கினால் போதும். வெளியிடும் புத்தகங்கள் விற்பனையாகிப் போட்ட முதல் திரும்பிவரும். வந்த பணத்தை மீண்டும் புத்தக வெளியீட்டில் ஈடுபடுத்தலாம். நாளடைவில் இது லாபம் தரக் கூடிய ஒரு நிறுவனமாகக்கூடத் திகழலாம். திறமை மிக்க எழுத்தாளர்களை ஊக்குவிக்கவும், நல்ல நூல்களை மலிவான விலையில் வெளியிடவும், குழந்தைகளின் அறிவுப் பசியைப் போக்கவும் குழந்தைப் புத்தக டிரஸ்ட் தொடங்கப்பட வேண்டியது மிக மிக அவசியமாகும்.

இந்தச் சங்கம் தோன்றிய நாளிலிருந்து இதுவரை இதனுடன் நெருங்கிய தொடர்புகொண்ட இரு எழுத்தாள நண்பர்களை இம் மாநாட்டில் சிறப்பிக்கிறோம். திரு. பூவண்ணன் அவர்களும், திரு. தங்கமணி அவர்களும் கால் நூற்றாண்டுக்கும் மேலாகக் குழந்தை இலக்கியம் படைத்து வருபவர்கள். பெரியவர்களுக்காக எழுதி, அதன் மூலம் நல்ல வருமானத்தைப் பெறுவதற்கான ஆற்றல் இருந்தும், குழந்தைகளுக்கு எழுதுவதையே குறிக் கோளாகக் கொண்டிருப்பவர்கள். எத்தனையோ எதிர்ப்புகளுக் கும் தொல்லைகளுக்கும் ஈடுகொடுத்துக் குழந்தை உலகில் வெற்றிக் கொடி நாட்டியவர்கள்.

குழந்தைகளுக்காக நிறைய நூல்களை வெளியிட்டுக் குழந்தை இலக்கியம் வளம்பெறத் தொடர்ந்து பணியாற்றி வருபவர் அருணோதயம் உரிமையாளராகிய திரு. அருணன் அவர்கள். அவர் பதிப்பாளர் மட்டுமல்லர்; எழுத்தாளராகவும் ஏற்றம் பெற்றவர்.

இம் மூவருக்கும் கேடயங்கள் வழங்கி கௌரவிப்பதில் இச் சங்கம் பெருமை அடைகிறது.

நல்ல சிந்தனையாளராகவும், சிறந்த பேச்சாளராகவும், எழுத் தாளராகவும் திகழும் நிதி அமைச்சர் மாண்புமிகு நாஞ்சில் மனோகரன் அவர்கள் இம்மாநாட்டைத் துவக்கி வைக்கவும், கல்வி கேள்விகளில் சிறந்து, இலக்கிய ஈடுபாடு கொண்டு, நெஞ்சில் உரமும் நேர்மைத் திறமும் பெற்று விளங்கும் மாண்பமை நீதிபதி மோகன் அவர்கள் கேடயங்களை வழங்கவும் இசைந்தது நாங்கள் பெற்ற பெரும் பேறாகும்.

வள்ளல் ஏ. வி. மெய்யப்பச் செட்டியாரவர்கள் இச்சங்க வளர்ச்சியிலே பெரும் அக்கறை காட்டி, சங்க முயற்சிகளுக் கெல்லாம் பேராதரவு அளித்து வந்தார்கள். அவர்கள் தாமாக முன்வந்து அறிவித்த ஏவி.எம். அறக்கட்டளைப் பரிசுகளைப் பெற்று ஊக்கம் பெற்றதோடு உயர்வும் பெற்ற எழுத்தாளர்கள் பலர். கருணை உள்ளம் கொண்ட ஏவி.எம். அவர்களின் மறைவால் திரைப்பட உலகம், தொழில் உலகம் ஆகியவற்றுடன் இலக்கிய உலகமும், எழுத்தாளருலகமும் பேரிழப்புக்கு ஆளாகியுள்ளன. செயற்கரிய செயல் பல செய்த ஏவி.எம். அவர்களின் திருஉருவப் படத்தைத் திறந்து வைக்க அவரை நன்கறிந்த உயர்திரு ஆர். இராமகிருஷ்ணனவர்கள் அன்புடன் இசைந்துள்ளார்கள்.

குழந்தைகளின் பேரன்பராகிய நேருஜியின் பிறந்த நாளையும் இம்மாநாட்டுடன் இணைத்துக் கொண்டாடுகிறோம். இச்சங்க

வேண்டுகோளுக் கிணங்கிப் பல பதிப்பாளர்கள் தயாரித்த குழந்தைப் புத்தகங்களை, நாளை வெளியிடுகிறார்கள் மாண்புமிகு நம் கல்வி அமைச்சர் செ. அரங்கநாயகம் அவர்கள். ஆசிரியரா யிருந்து அக்கறையுடன் கல்வித் தொண்டாற்றி, இளம் உள்ளங் களின் இன்றைய தேவைகளை நன்குணர்ந்த அவர்கள் குழந்தை நூல்களை வெளியிடுவது மிகவும் பொருத்தமே. ஏவி.எம் அறக் கட்டளையின் தங்கப் பதக்கத்தையும் வெள்ளிப் பதக்கங்களையும், சங்கம் நடத்திய குழந்தை இலக்கியப் போட்டியில் வெற்றி பெற்றோருக்கு வழங்கவந்துள்ள மாண்புமிகு கைத்தறி அமைச்சர் திருமதி சுப்புலட்சுமி ஜெகதீசன் அவர்களும் கல்வித் தொண்டிலே ஈடுபட்டு, பிள்ளைகளின் உள்ளமறிந்த பண்புமிக்க அம்மையாரா வார்.

நாளை மறுநாள் மாலையில் நடைபெறும் சிறுவர் பாடல் அரங்கத்தைத் துவக்கி வைக்க அன்போடு இசைந்துள்ளார் அரசவைக் கவிஞர் கண்ணதாசன் அவர்கள். அவ்வரங்கத்திற்குத் தலைமை தாங்க கவிஞர் பெ. ப. சோமு அவர்களைக் காட்டிலும் பொருத்தமான ஒருவரைக் காணமுடியாது. ஞானபீடப் பரிசு பெற்றவரும் குழந்தைகளுக்கும் இனிய கதைகளை எழுதி அவர்களை இன்பத்தில் ஆழ்த்தியவருமாகிய உயர்திரு அகிலன் அவர்கள் சிறப்புரை ஆற்றுகிறார்கள்.

மாநாட்டின் வரவேற்புக் குழுத் தலைவராயிருந்து, மாநாட்டின் வெற்றிக்குப் பல வகையிலும் உதவிவருபவர் உயர்திரு. எம். ஏ. எம். ராமசாமி அவர்கள். தம்முடைய தந்தை யாராகிய முத்தையா அரசரைப் போலவும், தாத்தாவாகிய அண்ணாமலை அரசரைப் போலவும் பொதுப் பணிகளில் ஆர்வ முடன் ஈடுபடுபவர். பிறர்க்குதவும் பெருங்குணம் படைத்தவர். தமிழ் மொழியும், குழந்தைக் குலமும் செழிப்புற்றோங்க வேண்டு மெனும் தீவிரக் கருத்துடையவர். செயல் திறம் மிக்க இவர்களது தலைமையில் இயங்குவதை இம்மாநாட்டுக் குழு நல்லதொரு வாய்ப்பாகக் கருதுகிறது.

மூன்று நாள்களும், பல்வேறு நிகழ்ச்சிகளில் பங்குபெறும் அறிஞர்கள், எழுத்தாளர்கள், கவிஞர்கள், வருகை தந்து சிறப்பிக்கும் அன்பர்கள் அனைவருக்கும் மீண்டும் என் வணக்கம்,

நன்றி.



பாராட்டுக் கேடயம் பெறும்
எழுத்தாளர்
**திரு. பூவண்ணன் அவர்கள்**



பாராட்டுக் கேடயம் பெறும்
எழுத்தாளர்
**திரு. தங்கமணி அவர்கள்**



பாராட்டுக் கேடயம் பெறும் பதிப்பாளர்

திரு. அருணன் அவர்கள்

(அருணோதயம்)

# சிறுவர் இலக்கியச் செல்வர் பூவண்ணன்

**சௌந்தர்**

குழந்தை எழுத்தாளர் சங்கம் 12 வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்காக ஒரு கதைப் போட்டி நடத்தியது. 'ஆலமரத்துக் கிளி' என்னும் கதையை நடுவர்கள் மூவரும் முதற் பரிசுக்குரியதாகத் தேர்ந்தெடுத்தார்கள். நடுவர்களுள் ஒருவரான திரு வைத்தண்ணு அவர்கள், அக் கதைக்கு 100க்கு 100 மதிப்பெண் கொடுத்தார். கதையை எழுதியவர் யார் என்று பார்த்தார்கள். அக் கதையை எழுதியவர் சங்கத்தின் செயலாளர்! சங்கச் செயலாளரே பரிசு பெற்றுல், மற்றவர்கள் என்ன நினைப்பார்களோ என்று தலைவர் திரு. வள்ளியப்பா அவர்கள் தயங்கினுர்கள். அதை அறிந்த செயலாளர் தன் கதையைப் போட்டியிலிருந்து விலக்கித் திருப்பிப் பெற்றுக் கொண்டார். அந்த எழுத்தாளர் — செயலாளர் யார்?...

1971 ஆம் ஆண்டு.

தமிழக அரசின் சிறுவர் இலக்கியப் பரிசுக்காக ஐந்து நூல்களைத் தேர்ந்தெடுத்தனர். ஒவ்வொரு நூலுக்கும் பரிசு ரூ 500/-. நடுவர்களின் முடிவை வெளியிட அரசு தயங்கியது! காரணம் ஐந்து நூல்களில் இரண்டு நூல்கள் ஒரே ஆசிரியர் எழுதியவை. ஒரே ஆண்டில் ஒருவர்க்கே இரண்டு பரிசுகளைத் தருவதா என்று தயக்கம் காட்டியது அரசு! அதனுல் மீண்டும் பரிசிலனை செய்யுமாறு நடுவர்களைக் கேட்டது. அதனுல் 'புள்ளிமான்' என்ற நூலுக்குப் பரிசளித்தது, 'ஆலம் விழுது' நூலுக்களித்த பரிசை விலக்கிக் கொண்டனர்.

ஒரே போட்டியில் இரு பரிசுக்கான நூல்களைப் படைத்த ஆசிரியர் யார்?...

தமிழ் நாட்டில் 32 பக்கங்களில் 2 அணு விலையில் தொடக்கம் முதலே வார இதழாக வெளிவந்த முதல் சிறுவர் பத்திரிகை —

கரும்பு ! சிறுவர் பத்திரிகை உலகில் பல்புதுமைகள் செய்த கரும்பின் ஆசிரியர் ஒரு கல்லூரி மாணவர். அவர் யார் ?...

சென்னை கோவிந்தப்ப நாயக்கன் பள்ளியில் 1955ல், 'திருக்குறள் கதைகள்,' என்னும் நூல் ஆறும் வகுப்புத் துணைப் பாடமாக வைக்கப்பட்டது. இந் நூலாசிரியர் அப்போது ஒரு கல்லூரி மாணவர். அவர் யார் ?

குழந்தை இலக்கிய வரலாறு — எனும் நூல் இத் துறையில் இந்திய மொழிகளில் வெளிவந்த முதல் நூல்! இதைப் படைத்தவர் யார் ?...

இத்தகைய பெருமைகளுக்கெல்லாம் உரியவர் திரு. பூவண்ணன் அவர்களே.

மாணவப் பருவத்திலிருந்தே எழுதி வருகிறார். அவர் தம் கல்லூரி படிப்பை முடிக்கும்போது 18 நூல்கள் வெளிவந்திருந்தன.

கடந்த முப்பது ஆண்டுகளுக்கு மேலாகத் தொடர்ந்து குழந்தைகளுக்காக எழுதி வருவோர் வெகு சிலரே. அவர்களுள் ஒருவர் திரு பூவண்ணன். இவரது இயற்பெயர் வே. தா. கோபால கிருஷ்ணன். எம். ஏ. பட்டம் பெற்றவர். இவர் 1932 ஆம் ஆண்டில் சென்னையில் பிறந்தார். இவரது தகப்பனார் பெயர்; வே தா மோதரனார். தாயார் பெயர் இலட்சுமிகாந்தம்மாள். இவருடைய சகோதரர்கள் பால்வண்ணன், அன்புமணி ஆகிய இருவரும் எழுத்தாளர்களே. இவர் துணைவியார் வத்சலா கோபால கிருஷ்ணனும் சிறந்த எழுத்தாளர். இவர்க்கு இரு புதல்வியரும், ஒரு செல்வனுமாகக் குழந்தைகள் மூவர் உள்ளனர்.

சிறுகதை, நாவல், நாடகம், கவிதை, கட்டுரை, விஞ்ஞானம், வாழ்க்கை வரலாறு—என்று எல்லாத் துறைகளிலும் எழுதியுள்ளார். இவர் தொடாத துறையில்லை. தொட்ட துறையில் தோல்வி கண்டதே இல்லை என அறுதியிட்டுச் சொல்லலாம். இவர் தற்போது வைணவக் கல்லூரியில் தமிழ்த் துணைப் பேராசிரியராகப் பணியாற்றி வருகிறார்.

இவர் எழுதிய சிறுவர்க்கான கட்டுரை முதன் முதலாக 1949 ஆம் ஆண்டில் 'குஞ்சு' என்னும் சிறுவர் இதழில் வெளியாகியது. பின்னர் பாலர்மலர் பூஞ்சோலை, மான் ஆகிய சிறுவர் பத்திரிகைகளில் சிறுகதைகள், பாடல்கள் ஆகியவைகளை அதே ஆண்டில் எழுதி வந்தார்.

இவரது 'சபாஷ் மணி' என்ற கதைப்புத்தகத்தைப் பழனியப்பா பிரதர்ஸ் நிறுவனத்தார் தங்கள் 'குழந்தைகள் பதிப்பகம்' மூலம் வெளியிட்டனர்.

1955 ஆம் ஆண்டில் குழந்தை எழுத்தாளர் சங்கம் சிறுவர்க்கான ஒரு மணி நேர நாடகப் போட்டி ஒன்று நடத்தியது. அப்போட்டியில் திரு பூவண்ணன் எழுதிய 'உப்பில்லாத பண்டம்' என்ற நாடகம் முதற் பரிசு பெற்றது. அந்நாடகம் புத்தகமாகவும் வெளிவந்துள்ளது.

இதுவரை 65 நூல்கள் வெளிவந்துள்ளன. அவைகளுள் காவேரியின் அன்பு - (நாவல்), புலவர் மகன் (வரலாற்று நாவல்), வீரமா முனிவர் (வாழ்க்கை வரலாறு) ஆகிய நூல்கள் இந்திய அரசினர் பரிசு பெற்றன.

புள்ளிமான் (சிறுகதைகள்), பாட்டுத் தோட்டம் (கவிதைகள்) மரகதக் கண்ணன் (நாவல்) ஆகிய நூல்கள் தமிழக அரசின் பரிசு பெற்றுள்ளன.

உப்பில்லாத பண்டம் (நாடகம்) குழந்த்த எழுத்தாளர் சங்கத்தின் பரிசைப் பெற்றது. வீரமா முனிவர் என்னும் வாழ்க்கை வரலாற்று நூல் ஏவி. எம் அறக்கட்டளைப் பரிசு பெற்றுள்ளது.

இவரது 'ஆலம் விழுது' என்ற கதையை 'நம்ம மக்களு' என்ற பெயரில் கன்னடத்தில் திரைப் படமாக எடுத்தனர். கன்னடப் படவுலகில் முப்பது வாரங்களுக்கு மேல் ஓடிப் புதிய சாதனையை உண்டாக்கியது.

பின்னர் இக்கதையை 'நம்ம குழந்தைகள்' என்ற தலைப்பில் தமிழில் படமாக்கினர். அப்படத்திற்காக 1971 ஆம் ஆண்டு சிறந்த திரைப்படக் கதாசிரியராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு இவருக்கு தமிழக அரசினர் ரூ 5000/- பரிசு வழங்கினர்.

அதே போல் இவரது 'அன்பின் அலைகள்' என்ற திரைப்படத்திற்குத் தமிழக அரசினர் 1979ல் தங்கப் பதக்கம் அளித்துப் பாராட்டியுள்ளனர்.

''பூவண்ணன் சிறந்த கவிஞர்; குழந்தைக் கதைகளும், கட்டுரைகளும் எழுதியுள்ளார். கல்லூரி ஆசிரியராகவும் இருப்பதால் இளம் உள்ளங்களை நன்கறியும் வாய்ப்புப் பெற்ற எழுத்தாளர்.

எல்லாவற்றையும் விடக் குழந்தை இலக்கிய வளர்ச்சியில் பேரார்வம் கொண்டு உழைத்து வரும் ஓர் இளைஞர்'' — என்று திரு தீ.ஜ.ர அவர்களே போற்றியுள்ளார்.

அரும் பெரும் அறிஞர் பெருமக்களின் பாராட்டுதல்களையும், வாழ்த்துக்களையும், அரசினர் பரிசுகள் உட்பட மொத்தம் பத்து (10) பரிசுகளையும் பெற்றவரான, 'சிறுவர் இலக்கியச் செல்வர் திரு பூவண்ணன் அவர்களுக்குக் குழந்தை எழுத்தாளர் சங்கம் இவ்வாண்டு கேடயம் வழங்கிச் சிறப்புச் செய்யவுள்ளது.

கேடயம் பெறும் பூவண்ணன் அவர்கள் காட்சிக்கு எளியவராகவும், பழகுவதற்கு இனியவராகவும் திகழ்பவர். தம்மை நாடிவரும் அன்பர்களுக்குப் பலவகையாலும் உதவி செய்யும் நற்குணம் படைத்தவர். பல எழுத்தாள நண்பர்களின் நூல்கள் வெளியிடுவதற்கு இவரது ஊக்கமும், உற்சாகமும் காரணமாக இருக்கின்றன என்றால் அது மிகையாது.

இவருடைய நூல்களை, 'பூவண்ணனின் சிறுவர் இலக்கியம்' என்னும் தலைப்பில் பா. பெருமாள் அவர்கள் டாக்டர் பட்டத்துக்காக ஆய்வு செய்து வருகிறார் என்பது இவர் படைத்த இலக்கியத்தின் சிறப்பை உணர்த்தும்!

பேரும் புகழும் பலவும் பெற்றிருந்தும் தன்னடக்கம் கொண்டு விளங்கும் பூவண்ணன் அவர்கள் கேடயம் பெறுவது குழந்தை எழுத்தாளர்கள் அனைவருமே பெருமைப்படக் கூடியதாகும்!

வாழ்க பூவண்ணன்!

வளர்க அவர்தம் குழந்தை இலக்கியப்பணி!



# மங்காத புகழ் மணக்கும் தங்கமணி

—ரேவதி—

1947 ஆம் ஆண்டுக்கும் 1952 ஆம் ஆண்டுக்கும் இடைப்பட்ட ஆறு ஆண்டுகளைத் தமிழில் குழந்தை இலக்கியத்தின் பொற்காலம் என்றே கூறலாம். ஏனெனில் இந்த ஆண்டுகளில் வெளிவந்த குழந்தைப் பத்திரிகைகளுக்குக் கணக்கே இல்லை. வெளியான பத்திரிகைகளைத் தொங்கவிட இடமில்லாது பத்திரிகைக் கடைக்காரர்கள் தவித்தனர்! அத்தனை பத்திரிகைகளும் விலை போயின! அதைவிட அதிசயம், வெளியான எல்லாப் பத்திரிகைகளிலும் குறிப்பிட்ட எழுத்தாளர் ஒருவரது கதை பெரும்பாலும் இடம் பெற்றிருந்தது. ஒரு பத்திரிகையில் சிறுகதை எழுதியிருப்பார், இன்னொன்றில் துப்பறியும் கதை எழுதியிருப்பார். மற்றொன்றில் சிரிப்புக் கதை எழுதியிருப்பார். வேறொன்றில் தொடர்கதை வெளியாகியிருக்கும். அந்த அளவுக்கு எல்லாப் பத்திரிகைகளிலும் இடம் பெற்றிருப்பார் அந்த எழுத்தாளர். இவர் மட்டும் எப்படி எல்லாப் பத்திரிகைகளிலும் இடம் பிடித்து விடுகிறார் என்பது எல்லோருக்குமே அதிசயமாக இருக்கும்.

இதில் குறிப்பிடத்தக்கது என்ன வென்றால் அவர் எழுதியிருக்கும் அத்தனை கதைகளும் சுவை மிக்கதாகப் படித்து நன்கு ரசிக்கும்படி மிக நன்றாக இருக்கும். சிறுவர்கள் மட்டுமல்லாது பெரியவர்களும் படித்து மகிழும்படி இருக்கும் அவரது கதைகள். இந்தப் பெருமைக்கு உரிய எழுத்தாளரை நேரில் காண வேண்டும் என்று படிக்கும் குழந்தைகள் மட்டுமல்ல எழுத்தாளர்களும் கூட விழைந்தனர். அவர் ஆணா, பெண்ணா, பெண்ணின் பெயரில் என்னைப்போல் மறைந்து எழுதும் ஆண் எழுத்தாளரா என்று பலருக்கும் சந்தேகம். இத்தனை பெருமைக்கும் உரிய அந்த எழுத்தாளர்தான் தங்கமணி.

தங்கமணி வெறும் எழுத்தாளர் என்பதைவிட எழுதிக் குவித்த எழுத்தாளர் என்று அழைப்பதே பொருத்தமாக இருக்கும். தங்கமணியின் இயற்பெயரே தங்கமணிதான்: இவரது தந்தையார் வாடாவூர் மு. தங்கவேலர் சென்னை துறைமுகப் பகுதியில் தானியக்

கிடங்குத் தாசுராக இருந்தவர். தாய் புதுவை சூடாமணியம்மாள். 1925 ஆம் ஆண்டு இவர்களுக்கு மகனாகப் பிறந்தவர்தான் தங்கமணி. இவர் அக்கால 3ஆம் (இக்கால எட்டாம் படிவம்) பாரம்வரைதான் படித்தவர் என்பதை அறியும்போது நமக்குத் திகைப்பாக இருக்கிறது. 3 ஆவது படிவம் படித்தவரா கல்லூரி மாணவர்களும் விரும்பும் வண்ணம் அறிவியல் நூல்களைப் படைத்து வருபவர் என்று நாம் மலைத்துப் போகிறோம். பள்ளிப் படிப்பு இல்லாவிட்டால் என்ன,' புத்தகங்களைப் படித்து இவர் பெற்றி ருக்கும் அறிவியல் விவரங்கள் பல்கலைப் பட்டம் பெற்ற மாணவனுக்குக் கூட இருக்குமா என்பது சந்தேகம். அறிவியல் துறையில் சமீபத்திய கண்டு பிடிப்புகள் வரை அவர் தெரிந்து வைத்திருக்கிறார்.

தங்கமணி வசித்து வந்த பகுதி சென்னைத் துறைமுகத்தைச் சேர்ந்த பிரிட்டிஷ் கிழக்கிந்தியக் கம்பெனிகாரர்களுக்கு சொந்த மான ஒரு கிடங்கு வெளி. 1906 ஆம் ஆண்டு பிரிட்டிஷ் இளவரசரின் இந்திய வருகையின் காரணமாக அந்தப் பகுதிக்கு பிளாக் டவுன் எனப் பெயரிட்டார்களாம். அங்கு வசித்து வந்த மக்கள் அந்தப் பெயரைக் கரியமால் நகர் எனத் தமிழ்ப் படுத்திக் கொண்டனர். அதன் இன்றையப் பெயர் கார்ப்பரேஷன் லைன் ஹார்பர் டெனமெண்ட்ஸ். சிறுவனாக இருந்த காலத்திலிருந்தே அந்தப் பகுதியில் இயங்கி வந்த சமூக நல இயக்கங்களுக்குச் செயலாளனாக இருந்து வந்திருக்கிறார் திரு. தங்கமணி. ஒய். எம். சி. ஏ பட்டி மன்றத்தின் சிறுவர் அமைப்பில் ஈடுபாடு கொண்ட தங்கமணி அவர்கள் நடிப்பதற்காகவும் படிப்பதற் காகவும் கதைகள் நாடகங்கள் எழுதத் தொடங்கினார். இப்படி அவர் குழந்தை இலக்கியம் படைக்கத் தொடங்கிய ஆண்டு 1947. பின்னர் வெளிவந்து கொண்டிருந்த எல்லாப் பத்திரிகைகளிலும் அவர் எழுதத் தொடங்கினார்.

1949 ஆம் ஆண்டு வெளிவந்த சுகுமார் என்ற புத்தகமே தங்க மணியின் முதல் நூல். இதை வெளியிட்டவர்கள் குழந்தைப் பதிப்பகத்தார். முதல் நூல் வெளிவருவதற்கு முன்பே தங்கமணி எழுதிக் குவிக்கத் தொடங்கி விட்டார் என்று கூறலாம். ராக்கெட் வேகத்தில் எழுதத் தொடங்கிய தங்கமணியின் கதைகள் இல்லாத பத்திரிகைகளே கிடையாது எனும் அளவுக்கு இவர் குழந்தை களுக்காக எழுதிக் குவித்தார். சிறுகதை, நாவல், நாடகம், வாழ்க்கை வரலாறு, அறிவியல் என்று எல்லாத் துறைகளிலும் தங்கமணி சிறுவர் இலக்கியத்தில் தனி இடம் பிடித்துக் கொண்டார்,

தமிழில் சிறுவர் இலக்கிய வளர்ச்சியைக் கணக்கிட வேண்டு மானல் தங்கமணியின் படைப்புகளை மதிப்பிட்டால் போதுமானது என்று துணிந்து கூறும் அளவுக்குத் தங்கமணி அதன் தொடக்க காலத்திலிருந்து எழுதிவருகிறார். நம்மில் பலர் தீப்பெட்டி அள விலும், ரயில் சீசன் டிக்கெட் அளவிலும், தொடக்க காலத்தில் வெளி வந்த பல சிறுவர் நூல்களைப் பார்த்திருக்க முடியாது. அப்படி வெளியான நூல்களில் பெரும் பகுதியைப் பிடித்துக் கொண்டவர் தங்கமணியே ஆவார். அவற்றையும் சேர்த்துக் கொண்டால் இன்று வரை தங்கமணி எழுதிய நூல்களின் எண்ணிக்கை 211 என்று அறியும்போது நம்மால் மலைக்காதிருக்க முடியவில்லை. தனக்கு இலக்கியத் துறையில் ஊக்கமளித்தவர்களைப் பற்றிக் குறிப்பிடும் போது தனது தந்தையார், சென்னை ஒய். எம். சி. ஏ, குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா, வானதி பதிப்பகம் திருநாவுக்கரசு, கல்கண்டு தமிழ்வாணன், வள்ளுவர் பண்ணை பழனியப்பன், கண்ணன் ஆசிரியர் ஆர்வி ஆகியோரை நன்றியுடன் நினைவு கூர் கிறார் தங்கமணி.

காட்சிக்கு எளியவரான தங்கமணி ஒரு முழுநேர எழுத்தாளர். எழுத்தையே தொழிலாகக் கொண்டவர். எழுத்தைத் தவிர வேறு எந்தத் தொழிலையும் செய்ய விரும்பாத துணிச்சல்காரர் என்றும் கூறலாம். தனக்கென்று ஒரு இலக்கியமும், எழுத்தைத் தவிர வேறு தொழிலில் ஈடுபட மறுக்கும் துணிவும் கொண்ட இவருடைய வாழ்க்கை துன்ப நிழல் படர்ந்த இலட்சியவாதிகளின் வாழ்க்கை யாக இராததற்குக் காரணம், தங்கமணி திருமணமே செய்து கொள்ளாமல் இருப்பதுதான் என்ற உண்மை நம்மைக் கலங்க வைக்கிறது

இளமையும் உடல் வலிவும் இருக்கும்வரை தனிமை அதிக மாகப் பாதிக்காது. ஆனால் தள்ளாமை என்ற நிலைக்கு உட்படும் போது அது படுத்தும் பாட்டை அனுபவித்தவர்களே அறிவர். அதுவும் எழுத்திலேயே-அதிலும் குழந்தை இலக்கியத்திலேயே தன் னுடைய காலத்தைக் கழித்து மிகக் குறைந்த தேவைகளுடன் வாழக் கற்றுக்கொண்டுவிட்ட தங்கமணியும் எழுத அதிக வாய்ப்பில்லாத காரணத்தாலும், வயதான காரணத்தாலும் இன்று மிகவும் துன்பப்படுகிறார் என்பதை அறியும்போது நமது கண் கலங்குகிறது. அவரது எழுத்துக்கள் எத்தனையோ ஆயிரம் குழந்தைகளை மகிழ்வித்திருக்கின்றன. அவர்களெல்லாம் இன்று பெரியவர்களாகி நல்ல நிலையில் இருப்பார்கள். அவர்களெல்லாம் ஒன்றுகூடி மனம் வைத்தால் தங்கமணிக்கு எதிர்காலத்தைப் பற்றிய கலக்கமேற்படாது ஒரு ஏற்பாட்டைச் செய்ய இயலும். தங்கமணி

திறமையும் துணிவும் கற்பனைவளமும் உழைப்பும் மிக்கவர்; அவருடைய எழுத்துக்கு என்றும் வரவேற்பு இருக்கும். அவருடைய நூல்களை அதிக அளவில் கொண்டு வரப் பதிப்பாளர்கள் முயற்சி செய்தால் தங்கமணிக்குப் பேருதவி புரிந்தவர்களாவார்கள்.

மற்ற மாநிலங்களில் வழங்குவதுபோல் எழுத்தாளர்களுக்கு ஒய்வுத் தொகை வழங்கும் திட்டமொன்றின் கீழ் தங்கமணிக்கு ஒய்வுத் தொகை வழங்கத் தமிழக அரசு முன்வந்தால் அது குழந்தை எழுத்தாளர்களுக்குச் செய்யும் சிறப்பாக அமையும்.

இந்த முயற்சிகளுக்கு முன்னோடியாக குழந்தை எழுத்தாளர் சங்கம் தங்கமணிக்குக் கேடயம் வழங்கிச் சிறப்புச் செய்யவுள்ளது. இவர் பெறுகின்ற கேடயம் குழந்தை எழுத்தாளர்கள் அனைவருக்கும் தங்கமணியிடம் உள்ள ஈடுபாட்டை வெளிக்காட்டும் வாயிலாக அமைந்துள்ளது. இவர் பெறுகின்ற கேடயம் குழந்தை இலக்கியத்தில் ஈடுபட்டுள்ளவர்கள் அனைவருக்கும் வழங்கப்படும் பெருஞ்சிறப்பாக எண்ணி மகிழலாம்.

வாழ்க தங்கமணி ! — வளர்க அவரது தொண்டு !

---

# பதிப்பு வானில் ஓர் அருணன்

—கவிஞர் புத்தனேரி ரா. சுப்பிரமணியம்

நாட்டுக்கோட்டை நகரத்தார் பதிப்பு மலையின் சிகரத்தார் என்று சொல்லவேண்டும். ஏனெனில் புத்தகப் பதிப்புத் துறையின் மூலம் முத்தமிழ் வளர்க்கும் வித்தகர்கள் அவர்கள். அவர்களுடைய விடா முயற்சியின் காரணமாகத்தான் ஆயிரக் கணக்கான அழகிய நூல்கள் தமிழ் அன்னைக்கு அணிகலன்களாகக் கிடைத்துள்ளன.

அத்தகைய பதிப்பாளர்களின் வரிசையில் சிறப்பாகக் குறிப்பிடத் தக்க ஒருவர் திரு. அருணன் என்னும் எல். அருணாசலம்.

இதுவரை அறுநூறுக்கும் மேற்பட்ட நூல்களை வெளியிட்டு வெள்ளி விழாவைத் தாண்டித் துள்ளுநடை போடும் அருணோதயம் பதிப்பகத்தின் உரிமையாளர் இவர். குழந்தை இலக்கிய வளர்ச்சியில் மிகுந்த ஈடுபாடு கொண்டு, 300-க்கும் மேற்பட்ட குழந்தை நூல்களை வெளியிட்டுள்ளவர்.

எனவே, ஆறுவது குழந்தை இலக்கிய மாநாட்டில் சிறந்த பதிப்பாளருக்கான விருதைத் திரு. அருணன் அவர்களுக்கு வழங்கிப் பெருமைப் படுகின்றது குழந்தை எழுத்தாளர் சங்கம்.

இராயப் பேட்டையில் உள்ள அருணோதயம் பதிப்பகத்தில், புத்தகச் சுவர்களுக்கு மத்தியில் ஒரு சாதாரண விற்பனையாளரைப் போல அடக்கமாக அமர்ந்திருக்கும் அருணனைப் பார்த்தால், "இவரா பதிப்புத் துறையில் இவ்வளவு சாதனைகள் புரிந்துள்ளார்!" என்று வியக்கத் தோன்றும். எளிமையும் இடையறாத உழைப்பும் இனிய பண்புகளுந்தான் இவரது வெற்றிக்குக் காரணமானவை.

திரு. அருணன் பிறந்த ஊர் தேவகோட்டை. தந்தையார் திரு. லட்சுமணன் செட்டியார். தாயார் திருமதி. சிதை ஆச்சி. பிறந்த நாள் 18-12-1924.

சின்னஞ் சிறு பருவத்திலேயே—எட்டாவது வயதிலேயே இவருடைய திருமணம் நடந்துவிட்டது. மனைவியின் பெயர் திருமதி கல்யாணி ஆச்சி. இந்த அம்மையார் உண்மையான வாழ்க்கைத் துணைநலமாக விளங்கி இவரது வெற்றிக்கு உதவி வருகிறார் என்று மனநிறைவோடு மனைவியைப் பாராட்டுகிறார் அருணன். இவரது குடும்பம் பெரிது. நவரத்னம் போல ஒன்பது குழந்தைகள்—(பெண்கள் ஆறு; ஆண்கள் மூன்று); ஏராளமான பேரன் பேர்த்திகள். மக்கட் செல்வத்தோடு புத்தகச் செல்வத்தைப் போற்றி வருபவர்.

இளம் வயதில் பூனைபோல் இருந்து 1942—ஆகஸ்ட் போராட்டத்தில் புலிபோல ஈடுபட்டவர் அருணன். போலிசாரின் வாரண்டுக்குத் தப்பி, வேலை தேடிச் சென்னைக்கு வந்தவர்.

விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டுத் தப்பி வந்தவர் புத்தகத் தொழிலின் போராட்டத்தில் அகப்பட்டுக் கொண்டார்!

''பதிப்புத் துறை புனிதமான தொழில்—மரியாதைக்குரிய பணி—என்பதால்தான் இலக்கிய ஆர்வம் காரணமாக, எஸ்.எஸ். எல். சி. யுடன் படிப்பை நிறுத்திவிட்டு, இந்தத் தொழிலுக்கு வந்தேன்'' என்கிறார் அருணன்.

பதிப்புத் துறையில் இவருக்கு வழிகாட்டியவர் ஒரு பண்ணையார்! ஆம்; தமிழ்ப் பண்ணையை நடத்திய திரு. சின்ன அண்ணாமலை. அவரது தமிழ்ப் பண்ணையில் ஆறு மாதங்கள் பணியாற்றிய பின், திரு. முல்லை முத்தையாவின் முல்லைப் பதிப்பகத்தில் ஒன்றரை ஆண்டுக் காலம் நிர்வாகியாக விளங்கினார்.

அப்பொழுதே குமரன், செட்டிநாடு, சுதேசமித்திரன் முதலிய ஏடுகளில் கதை—கட்டுரை எழுதி வந்தார். ஆவலுடன் ஆறு நாவல்களைப் படைத்துள்ள எழுத்தாளர் இவர்.

1946-ல் 'தென்றல்' என்ற இலக்கிய இதழை, குயிலன், இளங்கோ சொக்கலிங்கம் ஆகிய நண்பர்களின் கூட்டுறவுடன் நடத்தினார்.

''பசியும் பட்டினியுமாகப் பலநாள் உழன்று பத்திரிகையை நிறுத்திவிட்டோம்!'' என்று அருணன் சொல்லும்போது அவரது துயரத்தின் சாயல் தெரிகிறது.

ஆனாலும் பத்திரிகை ஆசை விடவில்லை! கொழும்பு 'சினிமா ரசிகன்', சேலம் 'மந்திரி' (வார இதழ்) சென்னையில் 'நிழல்',

'கலையரசு'—இப்படியாகப் பல பத்திரிகைகளில் பொறுப்பேற்று இலக்கியப் பசியை ஓரளவு தீர்த்துக் கொண்டார்.

பின்னர், பெருந்தலைவர் காமராஜ் ஆதரவில் மதுரையில் நடைபெற்ற 'தினச் செய்தி'யில் பணியாற்றினார்.

அதன்பின் சொந்தப் பொறுப்பில் பத்திரிகை நடத்தும் ஆசை துளிர்த்தது. 'அருணன்' என்ற பெயரிலேயே காரைக்குடியில் இருந்து மாதம் இருமுறை ஏட்டை நன்றாக நடத்தினார். நன்றாக நடத்தியதன் பரிசு பதினையாயிரம் ரூபாய் நட்டந்தான்!

பின்னும் தொடர்ந்தது இவரது பத்திரிகைப் பணி. கவி. கா. மு. ஷெரீப் நடத்திய 'தமிழ் முழக்கம்', கவிஞர் கண்ணதாசனின் 'தென்றல்' ஆகிய ஏடுகளில் துணை செய்தார்.

திரு. கண்ணதாசனின் நூல்களை வெளியிட வேண்டும் என்ற நோக்கத்துடனேயே 'அருணோதயம்' பதிப்பகத்தை 1953-ல் தொடங்கினார். கவிஞரின் 'ஈழத்து ராணி' என்ற முதல் நாவலே அருணன் வெளியிட்ட முதல் புத்தகம்.

சரியான விற்பனை இல்லாத நிலையில், தியாகராய நகரிலிருந்து பாரிமுனைக்கு நடந்தே சென்று கடைகளில் புத்தகங்களைப் போடுவதும், பின் வசூல் செய்வதும் அருணனின் அன்றாட உழைப்பு.

இந்த உழைப்பின் வெற்றியாகவே "அருணோதயம்" இன்று பெரியதொரு பதிப்பகமாக ஒளிபரப்புகின்றது.

முதுபெரும் எழுத்தாளர்கள் முதல் புதுப் புது எழுத்தாளர்கள் வரை, பலரது நூல்களை ஆர்வத்தோடு வெளியிட்டுள்ளார் அருணன்.

நாவல், சிறுகதை, வரலாறு, கவிதை, அறிவியல் முதலான பல துறைகளில் பொது நூல்களோடு ஏராளமான குழந்தைப் புத்தகங்களும் தரமான முறையில் வெளியிட்டுள்ளது அருணோதயம்.

'முத்தொள்ளாயிரம்' என்ற பழைய இலக்கியத்தை மலிவு நூலாகப் பத்தாயிரம் பிரதிகள் வெளியிட்ட இனிய அநுபவம் மறக்க முடியாதது என்கிறார் அருணன்.

இலக்கிய வரிசையில் 'குற்றாலக் குறவஞ்சி' நான்கு பதிப்புகள் வெளியிட்டுள்ளதாகவும் பெருமைப்படுகிறார்.



★ Dr. வ. சுப. மாணிக்கம்

| | | |
|---|---|---|
| கம்பர் | 5 | 00 |
| சிந்தனைக்களங்கள் | 16 | 00 |
| இலக்கிய விளக்கம் | 4 | 00 |
| ஒரு நொடியில் | 4 | 50 |
| ஒப்பியல் நோக்கு | 6 | 00 |

★ Dr. ந. சுப்புரெட்டியார்

| | | |
|---|---|---|
| தமிழ் பயிற்றும் முறை | 25 | 00 |
| கல்வி உளவியல் | 10 | 00 |

★ Dr. சோ. ந. கந்தசாமி

| | | |
|---|---|---|
| தமிழும் தத்துவமும் | 12 | 50 |
| திருக்குறள் கூறும் உறுதிப் பொருள் | 8 | 50 |

★ Dr. ந. வீ. செயராமன்

| | | |
|---|---|---|
| பாட்டியல் திறனாய்வு | 3 | 50 |
| யாப்பியல் திறனாய்வு | 6 | 50 |
| சதக இலக்கியம் | 6 | 50 |
| சிற்றிலக்கியச் செல்வம் | 12 | 50 |

★ கி. வா. ஜகந்நாதன்

| | | |
|---|---|---|
| வீரர் உலகம் | 5 | 00 |
| கவி பாடலாம் | 6 | 50 |

★ தி. வை. சதாசிவ பண்டாரத்தார்

| | | |
|---|---|---|
| இலக்கியமும் கல்வெட்டுக்களும் | 5 | 00 |
| கல்வெட்டுக்கள் கூறும் உண்மைகள் | 4 | 00 |

★ அ. ச. ஞானசம்பந்தம்

| | | |
|---|---|---|
| தேசிய இலக்கியம் | 7 | 00 |

★ ச. மெய்யப்பன்

| | | |
|---|---|---|
| கபிலர் | 4 | 00 |
| தாகூர் | 6 | 65 |

★ அ. லெ. நடராஜன்

| | | |
|---|---|---|
| மாவீரன்நெப்போலியன் | 12 | 50 |

★ மு. வை. அரவிந்தன்

| | | |
|---|---|---|
| உரையாசிரியர்கள் | 30 | 00 |
| மொழியியல் சிந்தனைகள் | 6 | 50 |

★ வி. எஸ். வி. இராகவன்

| | | |
|---|---|---|
| பிளினி | 20 | 00 |
| பெரிப்ளூஸ் | 16 | 00 |
| மெகஸ்தனிஸ் | 16 | 00 |
| தாலமி | 20 | 00 |
| யுவான் சுவாங் | 9 | 00 |
| பாஹியான் | 12 | 00 |
| மார்க்கோ போலோ | 7 | 50 |

★ சு. சமுத்திரம்

| | | |
|---|---|---|
| உறவுக்கு அப்பால் | 5 | 00 |
| ஒரு சத்தியத்தின் அழுகை | 6 | 00 |
| காகித உறவு | 5 | 75 |

★ அகர முதல்வன்

| | | |
|---|---|---|
| ஒரு அக்ரஹாரம் ஒளியிழக்கிறது | 4 | 25 |

★ எம். வி. வெங்கட்ராம்

| | | |
|---|---|---|
| அரும்பு | 18 | 00 |
| ஒரு பெண் போராடுகிறாள் | 18 | 00 |

கிளை : 89, லிங்கி செட்டித் தெரு, சென்னை - 1

258, மேலமாசி வீதி, மதுரை - 1

ர. சண்முகம், சிலம்பொலி செல்லப்பன், மாரி அறவாழி முத லான எழுத்தாளர்களின் நூல்கள் அருணோதய முத்திரை பெற் றுள்ளன.

புதிய புதிய துறைகளில், புதிய புதிய பொருள்களில், புதிய புதிய எழுத்தாளர்களின் படைப்புகளை அறிமுகப் படுத்த வேண்டும் என்ற உயர்ந்த நோக்கம் உடையவர் அருணன்,

''எழுதுகின்ற அத்தனை எழுத்துக்களும் சிறந்தது என்று சொல்லிவிட முடியாது; அல்லது அத்தனை எழுத்துக்களும் மட்ட மானவை என்று தள்ளிவிடவும் முடியாது! என்பது எனது திடமான நம்பிக்கை'' என்று குறிப்பிடுகிறார் அருணன்.

எழுத்தாளர்களை மிகவும் போற்றுகிறார். 'ராயல்டி' ஆனாலும் சரி, முழுஉரிமை என்றாலும் சரி பேசிய தொகையைக் கால தாமதம் இன்றி உடனுக்குடன் வழங்கும் நேர்மை வாய்ந்தவர் அருணன் என்று நூலாசிரியர்கள் மனமாரப் பாராட்டுவதை நான் செவியாரக் கேட்டு மகிழ்ந்தேன். இவ்வளவு நேர்மை யுடைய பதிப்பாளர்கள் மிகமிகக் குறைவு என்றே சொல்ல வேண்டும்.

அன்பாளர், பண்பாளர், எழுத்தாளர்களுக்கு ஆதரவாளர், மதிப்பு மிக்க பதிப்பாளர், பழகுதற்கு இனிய நட்பாளர், அயர் வற்ற உழைப்பாளர் என்ற சிறப்புக்கெல்லாம் உரியவர் அருணன்.

பயன்மிக்க நூல்களை இன்னும் ஏராளமாகப் படைக்க வேண்டும் என்ற அருணனின் ஆர்வம் வெற்றி மேல் வெற்றி பெற வேண்டும். அதன் பயனாகத் தமிழ் இலக்கியம் தழைக்க வேண்டும். சிறப்பாகக் குழந்தை இலக்கியம் செழிக்கவேண்டும். இதுவே இலக்கிய அன்பர்களின் இனிய ஆவல்.

''பதிப்பு வானில் ஓர் அருணன்'' ஒளி பரப்புகிறார் எனப் பாராட்டி வாழ்த்துகிறேன்.

அருணோதயம் அறிவொளி பரப்பட்டும்!



வருமான வரிச் சட்ட நூல், காவல்துறையின் கதை முதலான தனித் தன்மை வாய்ந்த நூல்களை வெளியிட்டதும் ஒரு சாதனை என மனநிறைவு கொள்கிறார்.

"தமிலன் எழுதிய காவல் துறையின் கதை அற்புதமான நூல். அந்தத் துறை பற்றித் தமிழில் இதுவே முதல்நூல். ஆனால் காவல் துறையினர்கூடப் பயனுள்ள இந்த நூலுக்கு உரிய வரவேற்பு தரவில்லை! ஆயினும் நான் சோர்வடைய வில்லை!" என்று இன்றையச் சூழ்நிலையைச் சுட்டிக் காட்டுகிறார். சிந்தனைக்குரிய குறிப்பு இது.

சமையல் கலை, சோதிடம், சுய முன்னேற்ற நூல்கள் போன்ற நூல்களே மிகுதியாக விற்கின்றன என்றும், நாவல் சிறுகதையெல்லாம் அடுத்தபடிதான் என்றும் தம் அநுபவத்தை உணர்த்துகிறார்.

"இந்தியாவில் தமிழ் நாட்டில்தான் பத்திரிகைகள் லட்சக் கணக்கில விற்கின்றன. ஆனால் புத்தக விற்பனையில் தமிழ்நாடு மிகவும் பின் தங்கி நிற்கிறது!" என்று வருந்துகிறார் அருணன்.

மக்களிடையே சில சஞ்சிகைகளின் செல்வாக்கும், மலிவுப் புத்தகப் பத்திரிகைகளும், பொதுநூல் பதிப்பாளரின் விற்பனையைப் பாதிக்கின்றன என்ற உண்மையையும் தொட்டுக் காட்டுகிறார்.

ஓரளவு நூலகத் துறை உதவி செய்வதனால்தான் இந்த அளவுக்காவது பதிப்பகங்கள் இயங்கிக் கொண்டிருக்கின்றன என்பதையும் அருணன் ஒப்புக் கொள்ளுகிறார்.

ஆனாலும் தமிழ்நாட்டில் கல்வி நிலையங்களில் உள்ள அத்தனை நூலகங்களும், அரசு நூலகங்களும், தனியார் நூலகங்களும் ஆர்வத்தோடு நூல்களை வாங்க முன்வந்தால், குறைந்தது ஐயாயிரம் பிரதிகளாவது விற்பனை உறுதி பெற வாய்ப்பு உண்டு என்பது அருணனின் கருத்து. நூலக இயக்கம் மக்கள் உள்ளத்தைப் போதுமான அளவு இன்னும் ஈர்க்கவில்லை.

பன்மொழிப் புலவர் கா. அப்பாதுரையார், நாரண துரைக்கண்ணன், தமிலன், நாஞ்சில் பி. டி. சாமி, பிரதிபா ராஜகோபாலன், அமுதாகணேசன் (குரும்பூர் குப்புசாமி), பி. சி. கணேசன், அ. லெ. நடராஜன், செந்துறை முத்து,

1976—சிறு கதை :

திரு. க. ஜெயங்கொண்டான்—பொற்காசு

திருமதி பொன்னம்மாள்—கடவுளின் கருணை

நாடகம் : திரு. ஆலந்தூர் கோ. மோகனரங்கம்—பொன்னம்மா ஒரு புதுமைப் பெண்

திரு. சௌந்தர்—எல்லோரும் வாழ்க !

பரிசு வழங்கியவர்—டாக்டர் எம். எஸ். சுப்புலட்சுமி

1977—அறிவியல் :

திரு. ஆழி. வே. இராமசாமி—காந்தத்தின் கதை

திரு. ரா. பா. சாரதி—காட்சி கண்காட்சியே !

நாவல் : திரு. ஞா. ஜெயசீலன்—ஒரு ரயில் புறப்படுகிறது

திரு. சி. வெங்கடசாமி—கல்லும் மலராகும்

1978—கவிதை :

முதல் பரிசு : திரு. மயிலை முத்தெழிலன்—நல்ல புத்தகம்

இரண்டாம் பரிசு—திரு. காரை இறையனார்...

வாழ்க்கை வரலாறு :

முதல் பரிசு : திரு. கே. பி. நீலமணி—அன்னை தெரசா

இரண்டாம் பரிசு : செல்வி ராஜலட்சுமி—தமிழறிஞர் திரு. வி. க.

1979—சிறு கதை :

முதல் பரிசு : இல்லை

இரண்டாம் பரிசு :

திரு. த. பழமலைநாதன் கிறிஸ்துமஸ்பரிசு முதலிய கதைகள்

நாடகம் :

முதல் பரிசு : திரு. பூதலூர் முத்து—நல்லவன்

இரண்டாம் பரிசு : திரு. மாமூலன்—நீலா நீலா ஓடிவா!

பரிசு வழங்குபவர் : அமைச்சர் திருமதி சுப்புலட்சுமி ஜெகதீசன்

## கேடயம் வழங்கி, கௌரவிக்கப்பெற்ற அறிஞர்கள்

1959—திரு. மயிலை சிவமுத்து
திரு. தி. ஜ. ரங்கநாதன் [ தி. ஜ. ர. ]
கேடயம் வழங்கியவர் : ஆளுநர் திரு. விஷ்ணுராம் மேதி

1961—திரு. பெ. நா. அப்புஸ்வாமி
திரு. ம. ப. பெரியசாமித்தூரன்
கேடயம் வழங்கியவர்: அமைச்சர் திரு. சி. சுப்பிரமணியம்

1963—திரு. அழ. வள்ளியப்பா
திரு. என். நடேசன் [ராஜி]
கேடயம் வழங்கியவர் : குடியரசுத் துணைத் தலைவர் டாக்டர் ஜாகீர் ஹுசேன்

1972—திரு. சி. என் வைத்தீஸ்வரன் [வைத்தண்ணு]
கேடயம் வழங்கியவர் : ஆளுநர். கே. கே. ஷா

1977—திரு. நெ. சி. தெய்வசிகாமணி
கேடயம் வழங்கியவர் : நீதிபதி எம். எம். இஸ்மாயில்

1979—திரு. பூவண்ணன்
திரு. தங்கமணி
கேடயம் வழங்கியவர் : நீதிபதி எஸ். மோகன்

### சங்கம் பாராட்டிய பதிப்பாளர்கள்

1963—திரு. என். ராமரத்னம் [கலைமகள் காரியாலயம்]
திரு. வ. சுப்பையா பிள்ளை [ சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம்]
கேடயம் வழங்கியவர் : குடியரசுத் துணைத் தலைவர் டாக்டர் ஜாகீர் ஹுசேன்

1972—திரு. செ. மெ. பழனியப்பச் செட்டியார் [பழனியப்பா பிரதர்ஸ்]
கேடயம் வழங்கியவர் : ஆளுநர் கே. கே. ஷா

1977—திரு. ஏ. திருநாவுக்கரசு [வானதி பதிப்பகம்]
பதக்கம் வழங்கியவர் : நீதிபதி எம். எம். இஸ்மாயில்

1979—திரு. எல். அருணன் [அருணோதயம் பதிப்பகம்]
கேடயம் வழங்கியவர் : நீதிபதி எஸ். மோகன்

ஏவி. எம். அறக்கட்டளைப் பரிசுகள்

1972—கவிதை : திரு. ஏ. ந. கணபதி — பிஞ்சு நெஞ்சம்
திரு. அழகனுர் — பட்டம்

வாழ்க்கை வரலாறு :
திரு. தி. சு. கலியபெருமாள்—சர். சி. வி. ராமன்
திரு. வைத்தண்ணு—டாக்டர் ஹாப்கின்ஸ்
பரிசு வழங்கியவர் : திரு. நெ. து. சுந்தரவடிவேலு

1973—சிறு கதை : திரு. சௌந்தர்—நல்ல கைகள்
திரு. ராஜலக்ஷ்மி [குந்தவை] — திருந்திய உள்ளம்
நாடகம் : செல்வி கி. பானுமதி — பண்பும் பாசமும்
திரு. எஸ். வஜ்ரவேலு—கண்ணன் எங்கள் சேவகன்
பரிசு வழங்கியவர் : அமைச்சர் திரு. செ. மாதவன்

1974—நாவல்
திரு. ஈ. எஸ். ஹரிஹரன் [ரேவதி] — பாண்டிய பரதன்
திரு. வெ. மல்லப் பிள்ளை — மாணிக்கம்

அறிவியல் :
திரு. ஆழி. வே. இராமசாமி—தம்பிக்குத் திரைப்படம்
திரு. வைத்தண்ணு—காற்றுடன் குட்டிப் பரிசோதனைகள்
பரிசு வழங்கியவர் : அமைச்சர் திரு. என். வி நடராசன்

1975—கவிதை
திரு. பி. வி. கிரி—ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே
திரு. ரா. பொன்ராசன்—பாப்பாப் பாட்டு

வாழ்க்கை வரலாறு :
திரு ஆழி. வே. இராமசாமி—இசை வளர்த்த தியாகராசர்
திரு. பூவண்ணன்—வீரமாமுனிவர்
பரிசு வழங்கியவர் : அமைச்சர் திரு. க. அன்பழகன்

## Association of Writers for Children

This Association, (Kuzhandai Ezhuthalar Sangam in Tamil) was founded in summer 1950 by a group of enthusiastic young writers inspired by Thiru Al. Valliappa who was its first Secretary. Right from the beginning the activities of the Association had an influential effect on book publishers—the producers of reading materials, on one hand, and with children—the consumers of reading materials, on the other hand.

To improve the standard of children's books in contents and production, the Association has

★ organised annual Book exhibitions which occasions were utilised to recognise able writers and experiments in publishing.

★ conducted story hours to enable authors to improve their scripts after 'test' by children before getting the books printed.

★ celebrated Children's Play Festivals which helped the production of new plays, and the discovery of talents.

★ arranged literary meetings and symposia to discuss problems of writers, exchange notes, release new publications and to meet visiting writers.

★ organised writers, workshops wherein new manuscripts have been produced.

★ made a survey of children's literature by analysing some 263 children's books under the able guidance of Dr. S. R. Ranganathan.

★ brought out the first 'Who's Who of Writers for Children in Tamil as early as 1961.

★ organised six conferences which were declared open by Sri Bishnuram Medhi, Sri C. Subramaniam Dr. Zakir Hussain, Sri K. K. shah Justice M.M. Ismail & Thiru K. Manoharan.

★ participated, through its members, in conferences and Seminars organised by SLBT, National Book Trust and Children's Book Trust etc.

In response to the appeal made by the Association, Tamil Publishers bring out new books for children every year and these are released simultaneously on Children's Day (14th November) at a function where in the writers and publishers concerned are introduced to the public. So far over 400 books were released in this manner since 1957. It is heartening to note that this practice is followed in Andhra and Kerala in the past few years.

With its limited membership and resources and the limited scope, the Association exists mainly by the enthusiasm of its members, who hope to see better public response for literature for children and its writers.

---



---

# குழந்தை எழுத்தாளர் சங்கம்

## தோற்றமும் வளர்ச்சியும்

1950-ஆம் ஆண்டு வரலாற்றுப் புகழ் பெற்ற ஆண்டு. அந்த ஆண்டிலேதான் குடியரசு நாடாகியது நம் பாரத நாடு.

அதே ஆண்டிலே தோன்றிய 'குழந்தை எழுத்தாளர் சங்கம்' தத்தித் தவழ்ந்து, தளிர் நடை பயின்று, 29 ஆண்டுகளைக் கடந்து, இன்று வெற்றி நடை போடுகிறது.

கடந்த ஆண்டுகளைத் திரும்பிப் பார்க்கிறோம் ...

அப்பப்பா ! இச்சங்கம் நடத்திய விழாக்கள் எத்தனை ! வெளியிட்ட மலர்கள்தாம் எத்தனை ! எத்தனை !!

அத்தனையும் வண்ணக் களஞ்சியங்கள்; எண்ணக் குவியல்கள்.

எங்களுக்குத் தோன்றும் எண்ணங்கள் ஆயிர மாயிரம். அவற்றைச் செயலாற்றும் பொழுது நாங்கள் அடையும் இன்பத்திற்கு ஈடுஇணை இவ்வுலகில் எதுவுமே இல்லை.

தமிழில் குழந்தை இலக்கியம் வளரப் பாடுபடுவது, குழந்தைகளுக்காக எழுதுவோரிடையே ஒற்றுமை உணர்வை ஏற்படுத்துவது, அவர்களது உரிமைகளைக் காப்பது, குழந்தை இலக்கிய வளர்ச்சியில் ஈடுபட்டோரிடையே தொடர்பு ஏற்படுத்துவது — இவைதாம் சங்கத்தின் முக்கிய நோக்கங்கள்.

### முதல் தலைவர்

தமிழ்ப் புத்தக உலகுக்குப் புத்துயிரளித்தவரும், குழந்தை இலக்கிய வளர்ச்சியில் அளவில்லா ஆர்வம் கொண்டு குழந்தைகளுக்காக 'அணில்', 'குழந்தைகள் செய்தி' இதழ்களை நடத்தியவரும், 'அணில் அண்ணன்' என்ற பெயரில் பல கதைகளை எழுதியவரும், வாய்மொழியாக வழங்கி வந்த பல கதைகளைத் திரட்டித்

தொகுத்து வெளியிட்டவருமாகிய அமரர் வை. கோவிந்தன் அவர்களே குழந்தை எழுத்தாளர் சங்கத்தின் முதல் தலைவர்.

நான்கு ஆண்டுகள் சங்கத் தலைவராயிருந்து குழந்தை எழுத்தாளர்களிடையே ஓர் எழுச்சியையும், பதிப்பாளர்களிடையே ஓர் ஆர்வத்தையும் ஊட்டினார்.

உற்சாகமிக்க குழந்தை எழுத்தாளர்களை ஒன்று சேர்த்து, 'உலகிலேயே ஒரு புதுமை' எனும்படி இச்சங்கத்தை நிறுவியவர் குழந்தைக் கவிஞர் திரு. அழ. வள்ளியப்பா அவர்கள். சங்கம் தோன்றியது முதல் இன்றுவரை அதன் வளர்ச்சிக்கும், அதன் வாயிலாகக் குழந்தை இலக்கிய வளர்ச்சிக்கும் அயராது உழைத்து வரும் இவர், சங்கத்தின் முதல் பொதுச் செயலாளராகவும், திரு. வை. கோவிந்தனுக்குப் பின்பு தலைவராகவும் பணியாற்றினார். திருவாளர்கள் நெ. சி. தெய்வசிகாமணி, ஆர்வி, கல்வி கோபாலகிருஷ்ணன் ஆகியோரும் சங்கத் தலைவராயிருந்து சங்கம் தழைக்கப் பல வகையிலும் பணியாற்றியுள்ளனர். பல்லாண்டுகளாகக் குழந்தை இலக்கியம் படைக்கும் அரும் பணியில் ஈடுபட்டுப் புகழ் பெற்றுள்ள இவர்களின் தலைமையில் சங்கம் நாளுக்கு நாள் நன்கு வளர்ச்சி பெற்றுள்ளது.

புத்தகக் காட்சிகள்

சங்கம் பிறந்த ஆண்டிலே, குழந்தைகளுக்காக வெளிவந்த தமிழ்ப் புத்தகங்களுடன் ஆங்கிலத்தில் வெளிவந்திருந்த பல குழந்தைப் புத்தகங்களையும், மாணவர்கள் தயாரித்த கையெழுத்துப் புத்தகங்களையும் திரட்டி, ஒரு காட்சியாகச் சென்னை முத்தியாலுப்பேட்டை உயர்நிலைப் பள்ளியில் வைத்திருந்தோம். அக்காட்சியில் இடம் பெற்ற தமிழ்ப் புத்தகங்களின் எண்ணிக்கை 300 தான். அவற்றிலும் பல, சிறிய அளவில், படங்களேயின்றிக் காட்சி தந்தன. ஆங்கிலப் புத்தகங்களுடன் அவற்றை ஒப்பிட்டுப் பார்த்தவர்கள், தமிழிலும் குழந்தை நூல்கள் இன்னும் பல துறைகளிலும் வெளிவர வேண்டும்; அச்சு அமைப்பில் சிறந்து விளங்க வேண்டும் என்று ஆசைப்பட்டனர்.

ஆண்டுதோறும் குழந்தைப் புத்தகக் காட்சியைச் சென்னை நகரின் பல்வேறு பகுதிகளிலும் தொடர்ந்து நடத்தினோம்.

ஹிந்து தியலாஜிகல் உயர்நிலைப்பள்ளி, மயிலை பி. எஸ். உயர்நிலைப்பள்ளி, புரசைவாக்கம் லேடி எம். சிடி. எம். பெண்கள் உயர் நிலைப்பள்ளி, திருவல்லிக்கேணி கெல்லட் உயர்நிலைப்பள்ளி,

தியாகராயநகர் ஸ்ரீராமகிருஷ்ண உயர்நிலைப்பள்ளி ஆகிய பள்ளிகளிலும் சங்கம் நடத்திய மாநாடுகளிலும், விழாக்களிலும் புத்தகக் காட்சிகளை நடத்தினோம். 1956-ல் டில்லியில் சாகித்ய அகாதெமி ஏற்பாடு செய்த அனைத்திந்தியப் புத்தகக் காட்சி, 1959-ல் கொழும்பு நகரில் இலங்கைக் குழந்தை எழுத்தாளர் சங்கம் நடத்திய அனைத்துலகக் குழந்தைப் புத்தகக் காட்சி, 1961-ல் பம்பாய்த் தமிழ்ச் சங்கம் நடத்திய குழந்தைப் புத்தகக் காட்சி முதலிய காட்சிகளுக்குத் தமிழ் நூல்களை அனுப்பி அக் காட்சிகள் வெற்றிபெற உதவியதோடு, தமிழ் நாட்டின் பல பகுதிகளிலும் பிற அமைப்புகள் ஏற்பாடு செய்த புத்தகக் காட்சிகளிலும் சங்கம் பங்கு கொண்டது.

இதனால் குழந்தைகளும், பெற்றோரும், எழுத்தாளரும், ஓவியரும், பதிப்பாளரும் குழந்தைப் புத்தகங்கள் அனைத்தையும் ஒரே இடத்தில் காண முடிந்தது. இதுவரை வளர்ந்த வளர்ச்சியைக் கணித்து, இனி வளர இருக்கும் வாய்ப்பைப் பரிசீலித்துப் படிப்படியாகத் திட்டமிட்டு வளர்ச்சி காண இந்தக் காட்சிகள் உதவியுள்ளன. இதனால் புத்தகத் தயாரிப்பில் அனுபவம் அதிகரிக்கிறது; தரமும் உயர்கிறது.

### குழந்தை எழுத்தாளர் புகைப்படக் காட்சி

குழந்தைகளுக்காக எழுதிவரும் எழுத்தாளர்களின் புகைப் படங்களை இச்சங்கம் திரட்டி வைத்துள்ளது. சங்கம் நடத்தும் மாநாடுகளிலும் மற்றச் சிறப்பு விழாக்களிலும், அவ்வாறு திரட்டிய எழுத்தாளர்களின் புகைப்படங்களை, அவர்களைப் பற்றிய குறிப்புகளுடன் காட்சியாக வைக்கிறது.

### நாடக விழா

குழந்தைகளுக்கு ஏற்ற நாடகங்கள் இல்லாத குறையைப் போக்க 1955-ஆம் ஆண்டில் சங்கம் ஒரு நாடக விழா நடத்தியது. இந்த விழாவிற்காகவே எழுதப்பெற்ற ஆறு ஒரு மணி நேர நாடகங்களை, ஆறு சிறுவர் குழுவினர் அரங்கேற்றினர். ராஜாஜி அவர்கள் இந்த விழாவைத் துவக்கி வைத்து ஆசி கூறினார்கள்.

அவ்வை டி. கே. சண்முகம், திரைப்பட இயக்குநர் ப. நீலகண்டன், கல்கியின் புதல்வி திருமதி ஆனந்தி ராமச்சந்திரன் ஆகிய மூவரும் நடுவர்களாக இருந்து, இந்நாடக விழாவில் நடிக்கப் பெற்ற சிறந்த நாடகங்களைத் தேர்ந்தெடுத்துத் தந்தனர்.

அடையாறு சிறுவர் சங்கம் நடத்திய 'அன்னை சொல் அமிர்தம்' என்ற கூத்தபிரானின் நாடகம் முதல் பரிசு பெற்றது.

இவ்விழாவில் அரங்கேறிய நாடகங்களில் சில இன்னும் குழந்தைகளால் விரும்பி நடிக்கப் பெறுகின்றன என்பதே, இவ்விழாவின் வெற்றிக்கு ஒரு சான்று.

இவ்விழாவில் அரங்கேறிய 'தங்கக் குழந்தைகள்' என்ற திரு. தம்பி சீனிவாசனின் நாடகம், பின்னர் நூல் வடிவாக வெளிவந்து, இந்திய அரசினர் பரிசு பெற்றது என்பதையும் இங்கே மகிழ்வுடன் குறிப்பிடுகிறோம்.

**குழந்தைகள் தின வெளியீடுகள்**

நேருஜி அவர்களின் பிறந்த தினமான நவம்பர் 14-ஆம் நாள் குழந்தைகள் தினமாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. 1957-ஆம் ஆண்டு முதல், நமது சங்கம் இந்த நாளைக் குழந்தை இலக்கியத் திருநாளாகக் கொண்டாடி வருகிறது. சங்கத்தின் வேண்டுகோளுக்கு இணங்க, பல பதிப்பாளர்கள் குழந்தைப் புத்தகங்களை, இந்த நன்னாளில் வெளியிடுவதற்கென்றே பதிப்பிக்கின்றனர். நல்ல முறையில் விழா எடுத்துத் தக்கவர்களைக் கொண்டு அந் நூல்களை விழாவில் வெளியிடுவதுடன், நூலாசிரியர்களையும், பதிப்பாளர்களையும் ஏற்ற முறையில் அறிமுகப் படுத்துகின்றது. நூலாசிரியருக்கும், ஓவியருக்கும், அச்சகத்தாருக்கும், பதிப்பாளருக்கும் நல்லுறவுப் பாலமாகவும் சங்கம் விளங்குகிறது.

1956-ஆம் ஆண்டு டில்லியில் நடந்த அனைத்திந்தியப் புத்தகக் காட்சிக்குத் தமது பிறந்த நாளில் (நவம்பர் 14) வருகை தந்த நேருஜி அவர்கள், அங்கிருந்த குழந்தைப் புத்தகப் பகுதியில் நெடுநேரம் செலவிட்டார். ஒவ்வொரு மொழியிலும் வெளிவந்துள்ள குழந்தைப் புத்தகங்களைப் பற்றிய விவரங்களை ஆர்வமுடன் கேட்டறிந்தார்.

குழந்தைகளிடத்திலும், அவர்களுக்கு ஏற்ற புத்தகங்களிடத்திலும் பெரும் ஈடுபாடு கொண்ட நேருஜியின் பிறந்த நாளை, குழந்தைகளையும் புத்தகங்களையும் இணைத்துக் குழந்தைப் புத்தக வெளியீட்டு விழாவாகக் கொண்டாடினால் சிறப்பாயிருக்குமே என்று, அப்போது அங்குத் தமிழ்ப் பிரதிநிதியாகச் சென்றிருந்த சங்கத் தலைவர் திரு. அழ. வள்ளியப்பா கருதினார். அதன் விளைவாகவே இத்திட்டம் உருப்பெற்றது என்பதைக் கூறிக்கொள்வதில் பெருமை கொள்கிறோம்.

முதல் ஆண்டில் பத்தே புத்தகங்களுடன் தொடங்கிய இந்த முயற்சி, சென்ற ஆண்டுவரை 402 புத்தகங்கள் வெளிவரத் துணை

புரிந்துள்ளது. இதுவரை தமிழில் வெளிவந்துள்ள குழந்தை நூல் களின் மொத்த எண்ணிக்கையில் இது ஏறத்தாழ நான்கில் ஒரு பங்கு என்பது குறிப்பிடத்தக்கது. இவற்றுள் பல மத்திய, மாநில அரசினரின் பரிசுகளையும் பாராட்டுதல்களையும் பெற்றுள்ளன. குழந்தைகள் தினத்தில் குழந்தை நூல்கள் வெளியிடுவது என்று நமது சங்கம் தொடங்கிய முயற்சி, தற்போது பிற மாநிலங் களிலும் பரவி வருவது மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும்.

### குழந்தை இலக்கிய மாநாடுகள்

இதுவரை சங்கம் நடத்திய குழந்தை இலக்கிய மாநாடுகள் ஆறு. 1959-ல் தமிழ்நாடு கவர்னராயிருந்த மேதகு விஷ்ணு ராம்மேதி அவர்களும், 1961-ல் கல்வி அமைச்சராயிருந்த திரு. சி. சுப்பிரமணியம் அவர்களும், 1963-ல் குடியரசுத் துணைத் தலைவராயிருந்த டாக்டர் ஜாகிர் ஹுசேன் அவர்களும், 1972-ல் தமிழ்நாடு கவர்னராயிருந்த மேதகு கே. கே. ஷா அவர்களும் 1977-ல் நீதிபதி உயர்திரு எம். எம். இஸ்மாயில் அவர்களும் மாநாட்டைத் துவக்கி வைத்தார்கள். இந்த ஆண்டு நிதி அமைச்சர் கி. மனோகரன் தொடங்கி வைக்கிறார்.

இம் மாநாடுகளின் வாயிலாகக் குழந்தை இலக்கியத் துறை யில் பொது மக்களையும் தலைவர்களையும் அக்கறைகொள்ளச் செய்துள்ளது சங்கம். மாநாடுகளில் வெளியிட்ட பல யோசனை களும் தீர்மானங்களும் இன்று செயல்பட்டு வருவது குறித்துச் சங்கம் பெருமைப்படுகிறது.

### சங்கத்தின் வெள்ளி விழா

சங்கத்தின் வரலாற்றில் பொன்னெழுத்துக்களில் பொறிக்க வேண்டிய நிகழ்ச்சியாகச் சங்கம் தனது வெள்ளி விழாவை 18-4-76 அன்று கொண்டாடியது. இதை கிண்டி ஆளுநர் மாளிகையில் பாரதக் குடியரசுத் தலைவர் உயர்திரு. பக்ருதீன் அலி அகமது அவர்கள் துவக்கி வைத்தார்கள். துவக்க விழாவில் சங்கத்தின் முன்னாள் தலைவர்களுக்கும், செயலாளர்களுக்கும் கேடயங்கள் வழங்கிச் சிறப்புச் செய்யப்பட்டது. சங்கத்தை நிறுவியவர் என்ற முறையில் குழந்தைக் கவிஞருக்கு குடியரசுத் தலைவர் பொன்னாடை அணிவித்துப் பாராட்டினார். குழந்தை எழுத்தாளர் யார் எவரை உருவாக்கியவர் என்பதற்காக திரு. ரத்னம் அவர்கள் சிறப்புக் கேடயம் வழங்கிக் கௌரவிக்கப் பெற்றார்.

அன்று மாலை ஏ. வி. எம். ராஜேஸ்வரி திருமண மண்டபத்தில் நடைபெற்ற குழந்தைகள் கலை நிகழ்ச்சியில் கலைச்செல்வி ஜெய

லலிதா கலந்து கொண்டார். கவிஞர் கண்ணதாசன் அவர்கள் தலைமையில் நடைபெற்ற பாடலரங்கத்தில் 14 கவிஞர்கள் பங்கு கொண்டு வழங்கிய கவிதைகளை சென்னை வானொலி சிறுவர் சங்கப் பேரவையைச் சேர்ந்த குழந்தைகள் பாடி அரங்கேற்றினர்.

அன்றே நடைபெற்ற நூல் வெளியீட்டு விழாவில் தலைமை நீதிபதி உயர்திரு பி. எஸ். கைலாசம் அவர்கள் நமது சங்கம் தயாரித்த 'தமிழில் குழந்தை இலக்கியம்—ஒரு மதிப்பீடு' நூலை வெளியிட்டு வைத்தார்கள். திருவாளர்கள் நெ. து. சுந்தர வடிவேலு, டாக்டர் ஔவை, நடராஜன் புலவர் கீரன் ஆகியோர் இலக்கிய உரையாற்றினர். இரண்டாம் நாள் நிகழ்ச்சி கருத்தரங் கத்துடன் துவங்கப் பெற்றது. உயர்நீதிமன்றத் தலைமை நீதிபதி உயர்திரு மா. அனந்தநாராயணன் அவர்கள் தலைமை வகித்தார். தமிழக அரசினரின் தலைமைச் செயலாளர் உயர்திரு கார்த்தி கேயன் அவர்கள் உரை நிகழ்த்த திருவாளர்கள் அ. லெ. நடராஜன் கி. ராஜேந்திரன், எம். ஆர். ரங்கராஜன், இரா. சுராஜ், மா. சண்முக சுப்பிரமணியம், சிலம்பொலி செல்லப்பன் ஆகி யோர் கருத்தரங்கில் பங்கு கொண்டனர். சங்கத்திற்குப் பல விதங்களில் உறுதுணையாக இருந்து பேருதவி புரிந்து வரும் உயர்திரு ஏ. வி. எம். அவர்களுக்கு மாலை அணிவிக்கப் பெற்றுச் சங்கம் பெருமை பெற்றது.

விழாவில் கடைசி நிகழ்ச்சியாக ''மீனுவின் கடிதம்'' என்ற வண்ணத் திரைப்படக் காட்சி நடைபெற்றது. வெள்ளி விழா நிகழ்ச்சிகளுக்கு பொறுப்பேற்று நன்கு நடத்தி வைத்த பெருமை முழுதும் வரவேற்புக்குழுவின் தலைவராகப் பணியாற்றிய திருமதி சௌந்தரா கைலாசம் அவர்களையே சாரும்.

**மலர்கள்**

மாநாடுகளிலும், புத்தக வெளியீட்டு விழாக்களிலும் சங்கம் பல மலர்களை வெளியிட்டுள்ளது. சிறுவர் இலக்கியத்தின் பல் வேறு துறைகளைப் பற்றியும், பிற மொழிகளில் குழந்தை இலக்கிய வளர்ச்சி பற்றியும் அம்மலர்களில் தக்கவர்கள் எழுதியுள்ளனர்.

**யார், எவர் ?**

201 குழந்தை எழுத்தாளர்களைப் பற்றிய விவரங்கள் அடங் கிய 'குழந்தை எழுத்தாளர்—யார், எவர் ?' என்ற நூலை 1961-ல் சங்கம் வெளியிட்டது. அதுவே முதல் முதலாகத் தமிழ் எழுத் தாளர்களைப் பற்றி வெளிவந்த விவரத் தொகுப்பு நூல் என்பது குறிப்பிடத் தக்கது. அதனைத் தொகுத்தவர் சங்க முயற்சிகளுக்

கெல்லாம் பெருந்துணை புரிந்து வருபவரும், பல குழந்தை நூல்களின் ஆசிரியருமாகிய ரத்னம் ஆவார்.

1972-ல் 'குழந்தை எழுத்தாளர்—யார், எவர்?' நூலை விரிவாக்கி, 370 குழந்தை எழுத்தாளர்களைப் பற்றிய விவரங்களுடன் சங்கம் வெளியிட்டது. எடுத்த செயலை இனிது நிறைவேற்றும் ப. நா. பாலசுப்பிரமணியன், ஈ. எஸ். ஹரிஹரன் (ரேவதி) இருவரும் இப்பொறுப்பை ஏற்று, நல்ல முறையில் உருவாக்கித் தந்தனர்.

### பாராட்டும் பரிசும்

மாநாடுகளில், குழந்தை இலக்கியத்திற்குச் சிறப்பாகத் தொண்டாற்றியுள்ள எழுத்தாளர்களைப் பாராட்டிக் கேடயம் வழங்கி சங்கம் கௌரவித்துள்ளது. பேராசிரியர் மயிலை சிவ முத்து, திரு. தி. ஜ. ரங்கநாதன் (தி. ஜ. ர.), திரு. ம. ப. பெரிய சாமித் தூரன், திரு. பெ. நா. அப்புஸ்வாமி, திரு. அழ. வள்ளி யப்பா, திரு. என். நடராஜன் (ராஜி), திரு. சி. என். வைத்தீஸ் வரன் (வைத்தண்ணு) திரு. நெ. சி. தெய்வசிகாமணி ஆகியோர் இவ்வாறு பாராட்டப் பெற்றவர்கள். இவ்வாண்டு பாராட்டப் பெறுபவர்கள் திரு. பூவண்ணன், திரு. தங்கமணி ஆகிய இருவரும்.

குழந்தைகளுக்கென நீண்ட காலமாகப் புத்தகங்கள் வெளியிட்டுவரும் பதிப்பாளர்களாகிய திரு. வ. சுப்பையா பிள்ளை (சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்) திரு. என். ராமரத்னம் (கலைமகள் காரியாலயம்), திரு. செ. மெ. பழனியப்ப செட்டியார் (பழனியப்பா பிரதர்ஸ், திரு. ஏ. திருநாவுக்கரசு [வானதி பதிப்பகம்] ஆகியோர் சிறப்பிக்கப் பெற்றனர். இம்மாநாட்டில் சிறப்பிக்கப் பெறுபவர் திரு. அருணன் [அருணோதயம்] அவர்கள்.

புத்தகக் காட்சி, ஆண்டு விழா, குழந்தைகள் தினம் போன்ற நிகழ்ச்சிகளில் சங்கம் பல இளம் எழுத்தாளர்களையும், பதிப்பாளர்களையும், ஓவியரையும் இயன்றபோதெல்லாம் பாராட்டியும், பரிசளித்தும் ஊக்குவித்துள்ளது.

### ஏவி. எம். அறக்கட்டளை

1971-ஆம் ஆண்டு சென்னை மாவட்ட மத்திய நூலகத்தில், டாக்டர் பா. நடராஜன் அவர்கள் தலைமையில் நடந்த குழந்தைகள் நாள் விழாவில், திரு. ஏவி. மெய்யப்ப செட்டியார் அவர்கள் குழந்தை நூல்களை வெளியிட்டதோடு, சங்கம் நடத்திய குழந்தை

இலக்கியப் போட்டிகளில் வெற்றி பெற்ற எழுத்தாளர்களுக்குப் பரிசுகளும் வழங்கினார்கள்.

சிறுவர் நாவல், அறிவியல் ஆகிய இரு துறைகளிலும் புத்தகமாக வெளியிடுவதற்கேற்ற கையெழுத்துப் பிரதிகளில் சிறந்தவற்றிற்கு வெள்ளிப் பதக்கங்கள் அவ் விழாவில் பரிசாக வழங்கப் பெற்றன. சங்கம், தனது வசதிக்கேற்ப எளிய முறையிலே அப்பதக்கங்களை வழங்கியது. அதைக் கண்ணுற்ற ஏவி. எம். அவர்கள், தாமாகவே முன்வந்து, ஏவி. எம். அறக்கட்டளையின் சார்பில், ஆண்டுதோறும் இரண்டு தங்கப் பதக்கங்களும், இரண்டு வெள்ளிப் பதக்கங்களும் அளிப்பதாக அறிவித்தார்கள். அவ்வாறே, கவிதை, வாழ்க்கை வரலாறு, கதை, நாடகம், நாவல், அறிவியல் ஆகிய ஆறு துறைகளில், 1972-ஆம் ஆண்டு முதல், ஒவ்வோராண்டும் இருதுறைகளுக்கு ஏவி. எம். அறக்கட்டளைப் பரிசுகள் வழங்கப் பெறுகின்றன. ஒவ்வொரு துறைக்கும் முதல் பரிசாகத் தங்கப் பதக்கமும், இரண்டாவது பரிசாக வெள்ளிப் பதக்கமும் கடந்த ஏழு ஆண்டுகளாக இருபத்தெட்டு எழுத்தாளர்களுக்கு வழங்கப்பெற்றுள்ளன.

அச்சிடப் பெற்ற நூல்களே பெரும்பாலும் அரசினர் பரிசுகளும், மற்றப் பரிசுகளும் பெற்று வருகின்றன. ஆனால், இந்த ஏற்பாட்டால், சிறந்த படைப்பாக இருந்தால், அது கையெழுத்துப் பிரதியாக இருக்கும்போதே பரிசு பெறுவதற்கான வாய்ப்பினைப் பெற முடிகிறது. எழுத்தாளர் பரிசு பெறுவதோடு, அவரது பரிசு பெற்ற கையெழுத்துப் பிரதியை நூலாக வெளியிடப் பதிப்பாளர்களும் மகிழ்ச்சியோடு முன்வருகிறார்கள்.

இப்போட்டிக்காக ஏராளமான எழுத்தாளர்கள் கையெழுத்துப் பிரதிகளை அனுப்புகின்றனர். ஆண்டுக்கு 4 பிரதிகளே பரிசுகள் பெறுகின்றன. பரிசு பெறாது போனாலும், புத்தகமாக வெளியிடுவதற்கான தகுதி பல கையெழுத்துப் பிரதிகளுக்கு இருப்பதால், அவை பின்னர் நூல் வடிவம் பெறுகின்றன. இதனால் பல குழந்தை நூல்கள் தமிழில் வெளி வரவும் இப்பரிசுத் திட்டம் வழிவகுத்துள்ளது.

கதை சொல்லும் நிகழ்ச்சி

குழந்தைகளுக்கு எழுதும்போது அவர்களுக்குப் புரியும் நடையிலே, விளங்கும் சொற்களிலே எழுதவேண்டும் என்ற நன்னோக்குடன், பல எழுத்தாள அன்பர்கள், தாம் எழுதிய கதைகளை அல்லது எழுதத் திட்டமிட்டுள்ள கதைகளைக் குழந்தைகளுக்குச்

சொல்லி, அவர்கள் எவ்வாறு அவற்றை வரவேற்கின்றனர் என்பதை அறிந்து கொள்ள வாய்ப்பளித்தது சங்கம். இந்தப் பயிற்சியின் பயனாகப் பல எழுத்தாளர்கள் பயனடைந்தார்கள். இயன்றபோதெல்லாம் சங்கத்தின் உறுப்பினர்கள் பலரும் குழந்தைச் சங்கங்களின் அழைப்பை ஏற்றுக் கதை நிகழ்ச்சிகளை நடத்தி வருகின்றனர்.

### கண்ணம்மை ஆச்சி பரிசு

குழந்தைகளே கதை சொல்லும் போட்டி ஒன்றின் வாயிலாகச் சிறப்பாகக் கதை கூறும் 9 முதல் 12 வயதுக்குட்பட்ட மாணவ மாணவியர் நால்வருக்கு இரு முதற் பரிசுகளும், இரு இரண்டாவது பரிசுகளும் வழங்கும் திட்டமொன்றை, பழனியப்பா பிரதர்ஸ் திரு. செ. மெ. பழனியப்பச் செட்டியார் அவர்கள், தமது அன்னையார் கண்ணம்மை ஆச்சியின் பெயரால் 1977-ஆம் ஆண்டு முதல் வழங்க இசைந்துள்ளார்கள். வெற்றி பெற்றவர்களுக்கு மாநாட்டில் பரிசு வழங்கப்படுகிறது.

### குழந்தை இலக்கியப் பண்ணை

குழந்தை இலக்கியம் பற்றி அவ்வப்போது கருத்தரங்கு நடத்தியும் திறனாய்வு செய்தும் வந்துள்ளது சங்கம். ஆக்க பூர்வமான சோதனை முயற்சிகள் செய்துபார்க்க திரு. கல்வி கோபால கிருஷ்ணன் அவர்கள் தலைமையில் குழந்தை இலக்கியப் பண்ணை ஒன்றை அமைத்து ஆர்வமுள்ள எழுத்தாளர்கள் அக்கறையுடன் புதிய புத்தகங்களை இயற்றும் வாய்ப்பையும் வசதியையும் உருவாக்கியது. இவ்வாறு தயாரான பல கையெழுத்துப் பிரதிகள் பின்னர் அச்சாகியுள்ளது. சில பரிசுகளும் பெற்றுள்ளன.

### அறிமுகம் - அனுபவம்

குழந்தை இலக்கியத் துறையில் பல்லாண்டுகளாக ஈடுபட்டுள்ள எழுத்தாளர்களின் அனுபவங்களை அறிந்துகொள்ளவும், புதிய எழுத்தாளர்களை அறிமுகப்படுத்தவும் 'அறிமுகம்—அனுபவம்' என்ற நிகழ்ச்சி மாதந்தோறும் நடந்து வருகிறது. இக்கூட்டங்களுக்கு வருகைதரும் எழுத்தாள அன்பர்கள், தங்கள் ஐயங்களைத் தீர்த்துக் கொள்ளவும், நல்ல முறையில் கருத்தைப் பரிமாறிக்கொள்ளவும், அவ்வப்போது வெளிவரும் புதிய நூல்களை அறிந்து கொள்ளவும் இது உதவுகிறது.

### ஆராய்ச்சி

1957-ஆம் ஆண்டு தமிழில் அதுவரை வெளிவந்திருந்த புத்தகங்களை ஆராய்ந்து ஒரு "சர்வே" எடுக்கப்பெற்றது.

உலகப் புகழ்பெற்ற நூலக மேதை பத்மஸ்ரீ டாக்டர் எஸ். ஆர். ரங்கநாதன் அவர்கள் தலைமையில் திருவாளர்கள் ம. ப. பெரியசாமித் தூரன், அழ. வள்ளியப்பா, தம்பி சீனி வாசன், திருமதி எஸ். சாந்தலட்சுமி ஆகியோர் கொண்ட ஒரு குழு 263 புத்தகங்களைப் பரிசிலனை செய்து ஓர் அறிக்கை தயாரித்தது. பின்னர் 1961-ல் யுனெஸ்கோ நிறுவனத்திற்காகத் தென்மொழிப் புத்தக டிரஸ்ட் ஆதரவில், குழந்தைகள் படிக்கும் பழக்கம் பற்றி திரு. அழ. வள்ளியப்பா ஓர் ஆய்வு நடத்தி, அறிக்கை வெளியிட்டார்.

### கருத்தரங்கும் கலந்துரையாடலும்

சென்னைக்கு வருகைதரும் பிறநாட்டுக் குழந்தை எழுத்தாளர்களை வரவேற்று, உறுப்பினர்களுடன் உரையாட வசதி செய்து கொடுத்துள்ளது சங்கம். இவர்களில் குறிப்பிடத் தக்கவர்கள் அமெரிக்க எழுத்தாளர் மன்றோ லீஃப், திருமதி ஜோன் வார்னர் வாட்ஸன் ஆகியோர்.

தேசிய புத்தக டிரஸ்ட் சிம்லாவில் நடத்திய கருத்தரங்கில் சங்க ஆலோசகர் திரு. நெ. து. சுந்தரவடிவேலு, சங்கத் தலைவர் திரு அழ. வள்ளியப்பா, திரு. கல்வி கோபாலகிருஷ்ணன் ஆகியோர் பங்கு பெற்றனர். சங்க ஆலோசகர்களான திருவாளர்கள் பெ. தூரன், பெ. நா. அப்புஸ்வாமி, ர. அய்யாசாமி, சங்க முன்னாள் தலைவர்களான திருவாளர்கள் கல்வி கோபால கிருஷ்ணன், ஆர்வி, தம்பி சீனிவாசன், எஸ். சுவாமிநாதன், நாக முத்தையா புத்தனேரி ரா. சுப்பிரமணியம் போன்றோர் இத்தகைய பல கருத்தரங்குகளில் கலந்துகொண்டு, சங்கத்தின் பணிகளை வெளி மாநிலத்தவரும் அறியத் துணை புரிந்துள்ளனர்.

### தி. ஜ. ர. நினைவுச் சொற்பொழிவு

குழந்தை இலக்கிய முன்னோடிகளில் ஒருவரான அமரர் தி. ஜ. ர. (தி. ஜ. ரங்கநாதன்) அவர்களின் நினைவாக ஆண்டு தோறும் நினைவுச் சொற்பொழிவு ஒன்று நடத்த வேண்டுமென வும், அச்சொற்பொழிவினை நிகழ்த்துபவருக்குத் தாம் ரூ 50 கொடுப்பதாகவும் திரு. எம். ஆர். ரங்கராஜன் (ராஜரங்கன்) தாமாக முன்வந்து அறிவித்தார். அவரது நல்ல செயலுக்குச் சங்கம் இசைவு தந்தது, 1975-ல் முதல் சொற்பொழிவு நடைபெற்றது. 'தி. ஜ. ர. வின் குழந்தை இலக்கியப் பணி' எனும் தலைப்பில் திரு. 'பூவண்ணன்' சிறப்புமிக்கதொரு சொற்பொழிவு நிகழ்த்தினர். இவ்வாண்டுத் துவக்கத்தில் 'பேராசிரியர் மயிலை

வெமுத்துவின் குழந்தை இலக்கிய பணி' என்ற தலைப்பில் இரண்டாவது சொற்பொழிவை புலவர் தணிகை உலகநாதன் அவர்கள் பலரும் பாராட்டும் வகையில் நிகழ்த்தினர்.

சென்ற ஆண்டு கவிமணியின் குழந்தை இலக்கியப் பணி என்ற தலைப்பில் திரு. சிலம்பொலி செல்லப்பன் அவர்களும், வை. கோவிந்தனின் குழந்தை இலக்கியப் பணி என்ற தலைப்பில் திரு நெ. சி. தெய்வசிகாமணி அவர்களும் சொற்பொழி வாற்றினர். இவ்வாண்டு பாவேந்தர் பாரதிதாசனின் குழந்தை இலக்கியப் பணி என்ற தலைப்பில் கவிஞர் திரு புத்தனேரி ரா. சுப்பிரமணியன் அவர்கள் சொற்பொழிவு நிகழ்த்தினர்.

### கவிமணி நூற்றாண்டு விழா

இந்த நூற்றாண்டின் துவக்க ஆண்டிலே குழந்தைகளுக்கான கவிதைகளை இயற்றித் தந்தவரும், குழந்தை இலக்கிய வானிலே முழு நிலவாகத் திகழ்ந்தவருமாகிய கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையவர்களின் நூற்றாண்டு விழாவைச் சங்கம் 1975-ல் மிகச் சிறப்பாகக் கொண்டாடியது. கவிமணியின் தாய்மையுள்ளத்தையும் தேனொழுகும் அவரது பாடல் நயத்தையும் விரிவாக எடுத்துக் கூறி, அவருக்குத் தக்க முறையில் அஞ்சலி செலுத்தியது.

### வளரும் குழந்தை இலக்கியம்

ஒரு தலைமுறை இடைவெளியில் குழந்தை இலக்கியம் கண்டுள்ள வளர்ச்சியும் மாறுதலும் எவ்வளவோ! அச்சுத் தொழில் நுட்ப வளர்ச்சி, ஓவியத் துறையில் முன்னேற்றம், பதிப்பாளர் ஈடுபாடு. அரசினர் காட்டும் ஊக்கம், புதிய பரிசு வாய்ப்புகள், பொது மக்கள் ஆர்வம்—இவை காரணமாக நல்ல சூழ்நிலை உருவாகி வருகிறது. ஆயினும், பொருளாதாரக் கவர்ச்சி இல்லாத துறை இது இருந்தும், குழந்தை இலக்கியத் துறைக்குத் தம்மாலான நற்பணிகளைப் பலர் புரிந்து வருகிறார்கள். இந்த ஆர்வத்தை அணையாமல் பாதுகாக்கும் தொண்டினை ஆற்றி வருகிறது சங்கம்.

### ஆற்ற வேண்டிய பணிகள்

குழந்தை எழுத்தாளர் சங்கம் அளவிலே சிறியது. பொருள் வசதியோ, சொத்தோ ஒன்றும் இல்லை. ஆனாலும் உற்சாகம், ஊக்கம், நம்பிக்கை—இவற்றைத் துணையாகக்கொண்டு குழந்தை இலக்கிய வளர்ச்சிக்குப் புதுப்புது முயற்சிகளை மேற்கொண்டு, பல சாதனைகளைச் சங்கம் புரிந்து வருகிறது.

மாறிவரும் சமூக நிலைக்கு ஏற்ப இன்னும் ஆற்றவேண்டிய பணிகள் பல. குழந்தைகளின் உடல் வளர்ச்சிக்குப் பாடுபடுவது போலவே, அவர்களின் உள்ள வளர்ச்சிக்கும் ஏற்ற வகையில் பணியாற்றுவது அவசியமாகிறது.

அரசினர் ஆதரவுடனும், கல்வியாளர், பெற்றோர், நூலகர், பொதுநலத் தொண்டர்கள் முதலியோரின் கூட்டுறவுடனும் இன்னும் பல திட்டங்கள் நிறைவேற இருக்கின்றன.

சங்கத்தின் குழந்தை இலக்கியப் பணி எல்லையில்லாதது. அது தொடரும், தொடரும், தொடர்ந்து கொண்டே இருக்கும். அதற்கு உங்களனைவரின் அன்பும் ஆசியும் தொடர்ந்து கிடைக்கும். கிடைத்துக் கொண்டே இருக்கும் என்பதே சங்கத்தின் நம்பிக்கை.

